# “சுவையுடன் வளர ராசிபலன் சொல்கிறது ஃபாரெக்ஸ்”




நீங்கள் ராசிபலனை நம்புகிறவர்களானால் சிம்மராசிக் குழந்தையைப் பற்றிய சில குணங்களைத் தெரிந்து கொள்ளுங்கள். மலர்ச்சியுடன் கூடிய தோற்றமும், விளையாட்டுத்தனமும் கொண்ட சிம்மராசிக் குழந்தை பிடிவாத குணம் கொண்டது. எனவே அதனிடம் கண்டிப்பாக இருங்கள். இந்தக் குழந்தையின் சிரிப்பு அழகாகவும், வசீகரிக்கக் கூடியதாகவும் இருக்கும்.

ராசிபலனை நம்பினாலும், நம்பாவிட்டாலும், குழந்தையின் போஷாக்கு என்றால் முழு நம்பிக்கைக்கும் பாத்திரமானது ஃபாரெக்ஸ்.

4-வது மாதம் முதல் உங்கள் கண்மணிக்குப் ''பாலடங்கிய ஃபாரெக்ஸை'' ஊட்டுங்கள். இது முழுமையான ஆடைப்பாலிலிருந்து தயாராவதால் குழந்தை நன்கு வளரத் தேவையான கால்ஷியம், தாது உப்புக்கள், புரதம், வைட்டமின்கள், கோதுமைத்தானியம் அனைத்தும் உள்ளடக்கியது.

6-வது மாதம் முதல் ஃபாரெக்ஸ்-வெஜ் ஊட்டுங்கள். இது ருசியுடன் கூடிய ஊட்டச் சத்துக்களடங்கியது.









**சுவையுடன் வளரும் வழி**

GX/50/213 TML

# என் தங்கச்சி படிச்சவ



**வ**யிற்றைக்கட்டி, வாயைக் கட்டி என்பார்களே, பிரபு முதலாளியிடம் கைகளையும் கட்டிக் கொள்கிறார். தங்கச்சி பெரிய்ய படிப்பு படித்துப் பட்டணத்திலிருந்து திரும்பும் போது, 'வாத்தியாரே, இங்கே வாங்க' என்று கூப்பிட்டு, 'இங்கிலீஸ்ல பேசும்மா' என்று தங்கச்சியிடம் ரகசியமாகச் சொல்லும் போதும் தங்கச்சி இங்கிலீஷில் 'ஹவ் டு யூ டு?' சொன்னதுமே முகத்தில் தோன்றும் பெருமிதமும் நாசூக்கான நடிப்பு.

பேச்சுக்கு மூச்சு தங்கச்சி, தங்கச்சி என்று பிரபு உயிரை விடும் போதே, தமிழ் சினிமாவின் எழுதப்படாத விதி பின்னணியில் தோன்றி, அந்தத் தங்கச்சி உயிரை விடப் போகிறார் — அதுவும் வில்லன்கள் கையில் என்று சிரிக்கிறது.

தங்கச்சியாக வரும் சித்ரா — (கொஞ்சம் மேக்கப்பைக் குறைத்துக் கொள்ளலாமோ?) அண்ணன் பாசம் கண்டு நெகிழ்கிறார் — மகிழ்கிறார். ஊரில் படிப்பறிவில்லாமல் இருப்பவர்களை ஊர்ப் பெரியவர் சாமர்த்தியமாக ஏமாற்றி, கடனில் இழுப்பதைக் கண்டுபிடித்து, வெகுண்டு அறிவுரை வழங்க, அதனாலேயே வில்லன்களால் எதிரியாகப் பாவிக்கப்படுவது கொஞ்சம் வித்தியாசம்.

ரூபிணி கிராமத்துப் பெண். பிரபுவுடன் வெடுக், துடுக் பேச்சுகள் — கொஞ்சம் முரட்டுத்தனமான காதல் — எல்லாமே நேர்த்தி.

சண்டைக் காட்சிகளில் சவுண்ட் எஃபெக்ட் தூக்கல் என்பதால் நம் மீதே அடி விழுகிற மாதிரி ஓர் எரிச்சல்.

பாடல்கள் ஆகாவும் இல்லை, சேச்சேயும் இல்லை. இயற்றி இசையமைத்த கங்கை அமரனுக்கு இது சென்ச்சுரி படம் என்பதைத்தான் விசேஷமாகக் குறிப்பிடலாம்.

வில்லனாய் வரும் கிட்டு ஏற்கனவே (சத்யா படத்தில்) சிரித்துச் சிரித்தே வில்லத்தனம் செய்ததால் இதில் ஆக்ஷன் ரீப்ளே பார்ப்பது போல் இருக்கிறது.

கிராமம், அண்ணன்—தங்கை, அவர்களுக்குள் பாசம், அநியாய வில்லன்கள் கூட்டம் என்று பழகின விஷயங்களே அடிபட்டாலும், கதையை அமைத்திருக்கும் விதத்தில் வித்தியாசம் இருப்பதால் —

என் தங்கச்சி படிச்சவ — பார்க்கக் கூடியவ.

— ஜெயமன்மதன்

• நோயாளிப் பெண்ணின் விரல் கவடு பதியப் பெற்று [illegible]

# மனித ஒளி வட்டம்

## மருத்துவத் துறையில் புதுமை



• தாம் உருவாக்கிய கருவியுடன் டாக்டர் ரமேஷ் சிங் சவான்.

புற்று நோய், மருத்துவத் துறைக்கே ஒரு சவாலாக இருந்து வருகிறது. ஒருவரைப் பாதித்திருப்பது புற்று நோயா என்று கண்டுபிடிப்பதற்கு முன் அது பரவி விடுகிறது. புற்று நோயினால் பீடிக்கப்பட்டு உள்ளார்களா என்று அறிவதற்கான சி.டி. ஸ்கேன் போன்ற சோதனைகளுக்கு நாம் அளிக்க வேண்டிய விலை மிக அதிகம். இந்தச் சூழ்நிலையில்தான் கிர்லியன் போட்டோ கிராபி என்ற தத்துவம் பெரும் பயன் தரக் கூடியதாக உள்ளது. இளம் மருத்துவர் டாக்டர் ரமேஷ் சிங் சவான் ஆய்வு நிலையில் அமைத்துள்ள ஒரு கருவி, புற்றுநோயின் ஆரம்ப நிலையானாலும் சரி, முற்றிய நிலையானாலும் சரி, மிகச் சரியாக ஆராய்ந்து கூறுகிறது.

டாக்டர் ரமேஷ் சிங் சவான், பாண்டிச்சேரி ஜிப்மர் மருத்துவமனையில் இந்திய மருத்துவ ஆராய்ச்சிக் கழகத்தின் ஆராய்ச்சியாளராக, இந்த எலெக்ட்ரோ கிராபி முறையைப் புற்றுநோய் கண்டு பிடிப்பதற்கும், கருத்தரிக்கும் சரியான நாட்களைக் கண்டுபிடிப்பதற்கும் பயன்படுத்தி வருகிறார். கிர்லியன் போட்டோ கிராபி முறையை மருத்துவத் துறையில் முதன் முறையாகப் புகுத்திய பெருமை டாக்டர் ரமேஷ் சிங் சவானையே சாரும். அதனால் இந்திய மருத்துவ ஆராய்ச்சிக் கழகம் அவருக்கு இவ்விரு அம்சங்களையும் ஆராய மூன்று ஆண்டுகளுக்கு அனுமதியளித்துள்ளது.

கே: தங்களுக்கு எப்படி இந்த கிர்லியன் போட்டோ கிராபியில் ஆர்வம் ஏற்பட்டது?

ப: இளம் வயதிலிருந்தே இறைவனின் புகைப்படங்களில் தலையைச் சுற்றி அமைந்திருக்கும் ஒளி வட்டம் என்னைக் கவர்ந்தது. அதைப் போன்ற ஒளிவட்டம் ஒவ்வொரு மனிதனின் உடம்பிலும் இருக்க வேண்டும் என்று என் உள்மனம் கூறியது. கடந்த எட்டு ஆண்டுகளாக அதற்கான புத்தகங்கள் பல படித்தேன். என்னை மிகவும் கவர்ந்த புத்தகம் 'மனித ஒளி வட்டம்'. அதைப் படித்தபின் இந்த ஒளி வட்டத்தை மையமாக வைத்தே என் ஆராய்ச்சி எண்ணம் ஓடியது. டாக்டர் வால்டர் கில்னரின் மனித ஒளிவட்டம் பற்றிய எழுத்துக்கள் என் எண்ணத்தை உறுதியாக்கின. அதை மனித நலத்திற்குப் பயன்படும் மருத்துவத் துறையில் புகுத்த எண்ணினேன்.

கே: மனித ஒளிவட்டம் ஆண், பெண் இருபாலாருக்கும் ஒரே மாதிரி அமைந்துள்ளதா?

ப: இல்லை. ஆண், பெண் இருபாலாருடைய ஒளிவட்டங்களும் வேறுபடும். ஆரோக்யமான உடலின் ஒளிவட்டம் நோயால் பாதிக்கப்பட்டவரிடமிருந்து வேறுபடும். உடல் நிலை, மன நிலை மிகச் சரியாக உள்ள மனிதர்களின் ஒளிவட்டம் ஆழ்ந்த நீல நிறத்தில் சற்று சாம்பல் நிறமாக இருக்கும். ஒளிவட்டத்தின் பரப்பு அதிகமாகி, மங்கிக் காணப்படும் பொழுது அவர்கள் நோயால் பீடிக்கப்பட்டிருக்கிறார்கள் என்று அறிந்து கொள்ளலாம்.

கே: இந்த ஒளிவட்டத்தைப் பதிவாக்கத் தாங்களே கருவி தயாரித்ததாகத் தங்கள் உதவியாளர்கள் கூறினார்கள். அது எப்படி செயல்படுகிறது?

ப: மனித சக்திப் புலம் அல்லது ஒளி வட்டம் — இதைப் பதிவு செய்வதுதான் இக் கருவி. கருவியை உருவாக்க ஆன செலவு ரூ. 8,000 மட்டுமே. இடமும் 10'×10' போதும். இதனை இயக்குவதும் மிக எளிது. எந்த எக்ஸ்ரே பிலிம் வேண்டுமானாலும் உபயோகிக்கலாம். ஒருவரின் சோதனைக்கு ஆகும் செலவு ரூ. 10 முதல் 12 மட்டுமே.

கே: இக் கருவியை உபயோகித்து எப்படி மனித ஒளிவட்டத்தைப் பற்றிச் சொல்கிறீர்கள்?

ப: சாதாரணமாக போட்டோ எடுப்பது போன்ற முறைதான். இன்சுலேட் செய்யப்பட்ட தகட்டின் மேல் இந்த எக்ஸ்ரே சுருள் வைக்கப்படுகிறது. பாதிக்கப்பட்டவரின் கட்டை விரலை இந்த பிலிமில் அழுத்தச் செய்கிறோம். ஒரு நிமிட இடைவெளி விட்டு 12 முதல் 14 தடவை கட்டை விரலின் சுவட்டைப் பதிவுச் செய்கிறோம். உடனடியாக அதைக் கழுவி முடிவும் சொல்கிறோம்.



• ஒரு பெண் கருவுறத் தயார் நிலையில் உள்ள நாளில் எடுக்கப்பட்ட கட்டை விரலின் ஒளிவட்டம், மற்றதை விட மையத்தில் அகன்று, வேறுபடுவதைக் காணலாம்.

கே: நீங்கள் வெளிநாடுகளெல்லாம் சென்று திரும்பியதாக அறிந்தோம். உங்கள் அனுபவம் பற்றி கூற முடியுமா?

ப: டாக்டர் டக்லஸ்டின் என்பவர்தான் இந்த கிர்லியன் போட்டோகிராபியில் உலக நிபுணர். அவர் என்னை யூகோஸ்லாவியாவில் நடந்த உலகக் கருத்தரங்கில் கலந்து கொள்ள அழைத்தார். அங்கு, கிர்லியன் போட்டோ கிராபியை அடிப்படையாக வைத்து நான் அமைத்துள்ள கருவி பற்றிய ஆராய்ச்சிக் கட்டுரையைப் படித்தேன். அதற்காக நான் எடுத்துக் கொண்டது ஒரு மணி நேரம். ஆனால் கேள்வி பதில்கள் மூன்று மணி நேரம் நீடித்தன. இது வரலாற்றிலேயே முதல் முறை என்று என்னை எல்லோரும் பாராட்டினார்கள். நான் அமெரிக்கா, கனடா, ரஷ்யா, இத்தாலி, ஜெர்மனி ஆகிய நாடுகளுக்கும் சென்றேன். எல்லோரும் இந்தியா இச் சாதனையின் முதல் படியில் ஏறி இருக்கிறது என்று வியப்பு மேலிடக் கூறினார்கள்.



• நோயற்ற நல்ல நிலையில் எடுக்கப்பட்ட ஒளி வட்டமும்....

• ......புற்று நோயினால் பாதிக்கப்பட்டவரின் ஒளி வட்டமும். நோய் பாதித்த நிலையில் வட்டம் பிளவு பட்டு இருக்கிறது. பிளவின் தன்மையைக் கொண்டு ஆரம்ப நிலை அல்லது நோய் முற்றிய நிலையை நிர்ணயிக்கலாம்.

கே: கிர்லியன் போட்டோ கிராபியின் அடிப்படையில் கிடைக்கும் முடிவும் சி. டி. ஸ்கேன் என். எம். ஆர். பரிசோதனைகளின் முடிவும் சரியாக இருக்கிறதா?





அவர்: புதுசா நாம் எடுத்து வெளியிட்டிருக்கிற படத்தைப் பத்தி ஜனங்க என்ன பேசிக்கிறாங்க?

இவர்: இருபத்தைஞ்சு வருஷம் கழிச்சு டி.வி.யிலே காட்ட வேண்டிய படத்தைத் தியேட்டர்லே போட்டு ஏன் இப்படிக் கழுத்தறுக்கிறாங்கன்னு தான்!

— மல்லிகை மன்னன்.

ப: நிச்சயமாக. நாங்கள் எடுத்துக் கொண்ட 300 பேர்களில் புற்று நோயால் பாதிக்கப்பட்ட பெண்கள் 100 பேர். மிக அதிகமாகக் கர்ப்பப்பை புற்று நோயும் மார்பகப் புற்று நோயுமே. இன்னும் சொல்லப் போனால் இந்த முறையில் புற்று நோயின் ஆரம்பத்திலேயே கண்டுபிடிக்க முடியும். சி. டி. ஸ்கேனிற்கு ஆகும் செலவு மிக அதிகமாக இருப்பதால் பலர் பயாப்ஸி சோதனைக்குத் தயாராகிறார்கள். அதாவது உடலை அறுத்துப் புற்றுநோய் உள்ளதாகக் கருதப்படும் பகுதியில் சிறு துணுக்கை எடுத்து ஆராய்தல். பயாப்ஸி சோதனையால் புற்று நோயின் செல்கள் பாதிக்கப்படுகின்றன. நோய் பரவவும் காரணமாக அமையலாம். ஆனால் கிர்லியன் முறை எதற்கும் இடையூறு அளிக்காமல் புற்று நோயை மட்டும் மிகச் சரியாகக் காட்டுகிறது. மருத்துவ சிகிச்சைக்குப் பின் முன்னேற்றத்தையும் கணக்கிட முடியும். உடலிற்கு எந்தத் தீங்கும் இல்லை. அதைப் போல கருத்தரிக்காத 25 பெண்களை ஆராய்ந்து அவர்களது கருமுட்டை தயார் நிலையில் இருக்கும் நாட்களைக் கூறியதில் 9 பேர் இன்று கருத்தரித்துள்ளார்கள்.

கே: உங்களுக்கு உதவியாளர்கள் யாராவது இருக்கிறார்களா?

ப: என்னுடைய ஆராய்ச்சி வெற்றிகரமாக நடக்கத் துணை செய்வதே அவர்கள் தான். டாக்டர் திருமதி வசந்தி, சோதனைச் சாலை உதவியாளர்கள் செல்வி அனுசுயா, திருமதி ஆஸி இவர்கள் மூவரும் என்னை விட மிக அதிக அக்கறை காட்டி இந்த ஆராய்ச்சி நடக்கத் துணை செய்கிறார்கள்.

பேட்டி: **பானுமதி நாராயண்.**

புகைப்படங்கள்: **டாக்டர் ரமேஷ் சிங் சவான்.**

# கருணாநிதி சிலை மீண்டும் அமையுமா?




கடந்த வருடம் எம்.ஜி.ஆர். மறைந்த தினத்தன்று நடந்த எத்தனையோ ரவுடித் தனங்களில், மிகவும் மோசமானது, அண்ணா சாலையில் இருந்த கருணாநிதி சிலை உடைக்கப்பட்டதுதான். விரல் விட்டு எண்ணக்கூடிய அளவில் இருந்த ரவுடிக் கும்பல் ஒன்று கடப்பாறையும் கையுமாகச் சிலையின் பீடத்தில் ஏறி நின்று சிலையை முழங்கால் அளவுக்கு இடித்துப் பின்னர், பீடத்தில் இருந்த திறப்பு விழா கற்களையும் இடித்து விட்டது. அந்த வேலை முடிந்த பின்னர் போலீஸ் சாவகாசமாக வந்து சேர்ந்தது!

மறுநாளே திராவிடர் கழகப் பொதுச்செயலாளர் வீரமணி, "உடைந்த சிலையைத் திராவிடர் கழகம் மீண்டும் நிறுவும்'' என்று அறிக்கை விட்டார். "பெரியாரின் விருப்பப் படி வைக்கப்பட்ட சிலை கலைஞரின் சிலை. சிலையை மீண்டும் நிறுவுவது திராவிடர் கழகத்தின் கடமை'' என்றார் வீரமணி. உடனே கலைஞர், "பெரியார் விரும்பியபடி அவருடைய பகுத்தறிவுக் கொள்கைகளை நாடு முழுவதும் பரப்ப வேண்டுமே தவிர, என்னுடைய சிலையை வைக்க வேண்டும் என்ற பெரியாரின் விருப்பங்களில் ஒன்றை மட்டும் பிடித்துக் கொள்ள வேண்டாம்'' என்று கூறி, சிலை அமைப்பதில் தமக்கு விருப்பமில்லை என்பதைத் தெளிவுபடுத்தினார். கொஞ்ச நாட்கள் கிணற்றில் விழுந்த கல்லாக இருந்த விஷயம், மீண்டும் பரபரப்பாகப் பேசப்பட்டு வருகிறது. காரணம்: கருணாநிதி சிலை இருந்த பீடத்தைச் சுற்றி, தட்டிக் கட்டப்பட்டு இருப்பதுதான். கருணாநிதியே விரும்பாத ஒன்றை வீரமணி செய்து காட்டத் துடிப்பது ஏன்?

கடந்த சில வருடங்களுக்கு முன்னர் கூட, 'நானும் வீரமணியும் இரட்டைக் குழல் துப்பாக்கி' என்று சொன்னவர் கலைஞர். வீரமணியும் கலைஞரை 'தமிழினத்தின் தலைவர்' என்று புகழ் பாடியதுண்டு. ஆனால் இலங்கைப் பிரச்னையில், கருத்து மாறுபாடுகள் இருவரையும் பிரித்தது. பெரியார் திடலில் நடந்த ஒரு கூட்டத்தில் தி.மு.க., அ.தி.மு.க. இரண்டையும் பற்றிக் குறிப்பிடும் போது, "இரண்டுமே எரிகின்ற கொள்ளிகள்; இதில் எது நல்ல கொள்ளி?" என்று கடுமையாக வசை பாடினார் வீரமணி. இதை எதிர்த்து முரசொலியில் காட்டமாகப் பதில் வந்தது.

தி.மு.க.வில் கலைஞரைச் சுற்றியுள்ள சிலர் அவர் காதில், 'வீரமணி சகவாசம் வேண்டாம்' என்று மந்திரம் ஓதிக் கொண்டிருக்கின்றனர். இதற்குக் காரணம் ஆத்திகர்களின் வெறுப்பை வீரமணி பெற்றிருப்பது தான். கூடிய வரையில் சமூகத்தில் எந்தச் சிறு பிரிவினரையும் பகைத்துக் கொள்ளக் கூடாது என்று கலைஞரின் கூடாரத்தில் முடிவு செய்யப்பட்டிருக்கிறது. இந்த நிலையில், வீரமணியே வலிய வந்து கலைஞரைச் சங்கடத்தில் ஆழ்த்துகிறார். அதற்கு நல்ல உதாரணம் இந்தச் சிலை விவகாரம்.

'சிலை வைப்பதால் ஒருவரது எதிர்காலம் தாழ்ந்திடும் என ஒரு சிலர் கருதுவது போல, அந்த மூடநம்பிக்கைக்குக் கருணாநிதியும் ஆட்பட்டு விட்டாரோ, என்று மறைமுகமாகப் பொருள் கொள்ளும்படி தமக்கு வீரமணி எழுதிய கடிதத்தைப் பற்றி கலைஞர் குறிப்பிட்டார். அதற்குப் பதில் சொல்வது




போல், "தாழ்வு ஏற்படும் என்ற மூடநம்பிக்கைக்கு ஆட்பட்டு, மறுத்தும் கேளாமல் சிலை வைக்க வீரமணி நினைக்கிறார்' என்று அவர் மீதுதான் சந்தேகம் வரும்" என்று கருணாநிதி அறிக்கைவிட்டிருக்கிறார்.

எமர்ஜென்ஸி காலத்தில் கடுமையான எதிர்ப்புகளுக்கிடையில் சிலைக்கான இந்த இடத்தைப் பெற்றது திராவிட கழகம். அப்போதும் தமக்குச் சிலை வேண்டாம் என்றுதான் மறுத்தார் கலைஞர். ஆனால் 'மணியம்மையார் ஒப்புக் கொள்ளவில்லை. இப்போது இந்த இடத்தில் 'வெறும் பீடம் மட்டும் இருப்பது அமங்கலமாக இருக்கிறது' என்று அக்கம் பக்கத்துக் கடைக்காரர்கள் சொல்கிறார்கள். போக்குவரத்துப் போலீஸார் சிலை இல்லாத பட்சத்தில் அந்த இடத்தில் நுங்கம்பாக்கத்தில் இருப்பது போன்ற நவீன போக்குவரத்துக் கண்காணிப்புக் கூண்டு ஒன்றை அமைக்கலாம் என்று தெரிவித்துள்ளனர்.

ஒரு பக்கம் யாருக்காகச் சிலை வைக்கப் பட இருக்கிறதோ அவரே 'சிலை வேண்டாம்' என்று சொல்லி விட்டார். மறுபக்கம் இது போன்ற விஷயங்கள். வீரமணி என்ன செய்யப் போகிறார்?

— லம்பாஜி

படம்: சுபா.

# கல்லூளி மங்கத்தனம்



கர்நாடக மாநிலத்தில் உள்ள ஹாசன் மாவட்டத்தில் பல லட்சம் ரூபாய் மதிப்புள்ள கிரானைட் பாறைக் கற்கள் கொள்ளை போய்க் கொண்டிருப்பது கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. இந்த கிரானைட் கற்கள் இயற்கையிலேயே நட்சத்திரம் போன்ற 'டிசைன்' உடையவை. பாலிஷ் செய்யச் செய்ய நட்சத்திர வடிவங்கள் பிரகாசமாகக் கண்ணுக்குத் தெரியும். எனவே வெளிநாடுகளில் இக்கற்களுக்கு ஏக கிராக்கி.

ஹாசன் மாவட்டத்திலிருந்து திருடிச் செல்லப்படும் இக்கற்கள் மெங்களூர் துறைமுகம் வழியே கள்ளக்கடத்தல் செய்யப்படுகின்றன என்பதும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

சமீபத்தில் ஹாசன் தாசில்தார் சந்திர கௌடா, லைசென்ஸ் இன்றிக் கற்களைப் பெயர்த்துக் கொண்டிருந்த சில கண்டிராக்டர்களை விசாரித்த போது அவர்கள் கற்களைப் போட்டது போட்டபடி வைத்துவிட்டு ஓடிவிட்டார்களாம்.

இதில் வேடிக்கை என்னவென்றால் மைசூர் மினரல்ஸ் லிமிடட் (அரசு நிறுவனம்) இவ்விடத்தில் கிரானைட் அகழ்வு செய்ய அனுமதி கோரியும், அனுமதி இன்னும் வழங்கப்பட வில்லை.

— நன்றி: எகனாமிக் டைம்ஸ்

தகவல்: விஸ்வா

MOTEL

# LEEL MAHA

NEELANKARAI

## You bet, you can't miss it, on the way to Mahabalipuram!




The warm welcome begins at our front door and lingers throughout your stay.

Have peace, pleasure and lively fun on the green lawns near the bay; let your tongue choose the taste from a variety of South Indian, North Indian, Continental Delicacies and Buffet Lunch/Dinner.

A visit to LEEL MAHA will make you follow it up with many more.

We offer an ideal package of Food 'N' Fun on the Sun-lit, beaches and Moon-lit nights.



MOTEL
**LEEL MAHA**
FAST FOOD
DRIVE-IN AC RESTAURANT
EAST COAST ROAD,
15, KAPALEESWARAR NAGAR,
NEELANKARAI, MADRAS - 600 041.

*Where business is a pleasure, your pleasure is our business.*

# பிளஸ் 2+ வேலை!



* பெண்ணாத்தூர் சுப்பிரமணிய அய்யர்.

"மயிலை பி. எஸ். சீனியர் செகண்டரி பள்ளியின் புதிய கட்டடத்துக்கு சிருங்கேரி சங்கராச்சாரியார் நன்கொடை வழங்கியிருக்கிறார்; கட்டடத்துக்கு ஸ்ரீ சிருங்கேரி வித்யா பாரதி பிளாக் என்று பெயர் வைத்திருக்கிறார்கள்'' என்பதாக ஒரு செய்தி...

பி. எஸ். உயர்நிலைப்பள்ளி, மயிலாப்பூரில் உள்ள மிகப் பழைய பள்ளிக்கூடம். இந்த 'பி. எஸ்.'ஸின் விரிவு, பெண்ணாத்தூர் சுப்பிரமணிய அய்யர் என்பது பலருக்கும் தெரியும். ஆனால் யார் இந்த மனிதர்?

பள்ளியின் கரஸ்பாண்டெண்ட் பி. ஸி. சேகர் சொன்னார்:

"வட ஆர்காடு மாவட்டத்தில், திருவண்ணாமலைக்குப் போகும் வழியில் இருக்கிறது பெண்ணாத்தூர். கல்லூரியில் படிக்கும் போதே தகப்பனாரை இழந்தவர் சுப்பிரமணிய அய்யர். முதலில் சப்ரிஜிஸ்திரார் ஆகி, பிறகு நீதிபதி சர் எஸ். சுப்பிரமணிய அய்யரின் விருப்பப்படி மேற்கொண்டு படித்து 'அட்டர்னி' ஆகிப் பொருளும் புகழும் சேர்த்தார். அவருக்குச் சந்ததி யாரும் இல்லாததால், அவர் மறைந்த பிறகு, 1904—ல் பி. எஸ். அறக்கட்டளை நிறுவப் பட்டுப் பள்ளிக்கூடம் உருவாகியது. சுமார் நாற்பது வயது வரையே வாழ்ந்தார் அவர்.

"பக்தவத்சலம் முதல்வராயிருந்த போது, அரசாங்கம் எடுத்துக் கொண்ட பள்ளிகளில் இதுவும் ஒன்று. இலவசக் கல்வியும், தமிழ் போதனா மொழியும் இங்கே அறிமுகப்படுத்தப்பட்டு, மாநில கல்வித் திட்டப்படி நடைபெறத் துவங்கியது.

"பல்லாயிரக்கணக்கான மத்திய அரசு ஊழியர்களுக்கும், தனியார் நிறுவன ஊழியர்களுக்கும், மயிலைப் பகுதியில் ஓர் ஆங்கில மீடியம் பள்ளி தேவை என்ற எண்ணம் ஏற்பட்ட போது ராமகிருஷ்ண மடம் சாலையிலுள்ள பி. எஸ். உயர்நிலைப் பள்ளி வளாகத்திலேயே சீனியர் செகண்டரி பள்ளியும் உருவாகியது, ஜூன் 1976—ல். இதை மத்திய கல்வி போர்டு கல்வித் திட்டப்படி நடத்துகிறோம். இதன் புதிய கட்டடத்தைத்தான் சிருங்கேரி சன்னிதானம் திறந்து வைத்தார்கள். மூன்று லட்ச ரூபாய் நன்கொடையும் கொடுத்தார்கள்.

"புதிய கல்விக் கொள்கைப்படி, படிக்கும் போதே வேலை கிடைப்பதற்கான வாய்ப்புக்களையும் உருவாக்க வேண்டும். இந்தப் பள்ளியில் +2 வகுப்பில் இந்த ஆண்டு பொது இன்ஷூரன்ஸ் ஒரு பாடமாக அறிமுகப்படுத்தப்படுகிறது. ஐம்பது மதிப்பெண் வாங்கினால் அப்ரன்டிஸ் அஸிஸ்டென்டாக ஆயிரம் ரூபாய் 'ஸ்டைபென்ட்'டில் வேலை கொடுக்கப்பட்டு, ஒரு வருஷத்துக்குப் பிறகு, A நகரங்களில் 1292 ரூபாயும், பிற நகரங்களில் 1227 ரூபாயும் சம்பளமாக வழங்கப்படும். இதிலேயே உயர் பதவிகளும் பெற வாய்ப்புக்கள் உண்டு.

"இந்தத் திட்டம் இந்த ஆண்டு முதல் இந்தியாவில் இருபது பள்ளிகளில் மட்டுமே அறிமுகப்படுத்தப்படுகிறது. இப்படி சுமார் எண்ணூறு மாணவர்களுக்கு +2 படித்த உடன் வேலை கிடைக்க இது திடமான வாய்ப்பை அளிக்கிறது.

"என்ஃபீல்ட் அதிபர் விசுவநாதன் எங்கள் பள்ளியைப் போன வருஷம் வந்து பார்த்தார். இங்கே உள்ள கல்வித்தரம், மாணவர்களின் ஒழுக்கம், கட்டுப்பாடு எல்லாவற்றையும் பார்த்து விட்டு சிருங்கேரி பெரியவர்களிடம் சொல்ல, அவர் உடனே நன்கொடையை அளித்தார்.''

— சாருகேசி

* சிருங்கேரி சன்னிதானம், நன்கொடை காசோலையைப் பி. எஸ். உயர்நிலைப் பள்ளி நிர்வாகி ஸி. ஆர். பட்டாபிராமனிடம் வழங்குகிறார்



* கல்கியில் 'பயங்கரமான மானுடத் துயர' தலையங்கம் கண்டேன். அமெரிக்க வல்லரசின் எதேச்சாதிகாரத்தால், கண்மூடித்தனத்தால் நடந்த சம்பவத்தை நியாயப்படுத்தியிருக்கிறீர்கள்! எங்களால் அதை ஜீரணிக்க முடியவில்லை.

மேல்பட்டி. எம். வி. வெங்கடேஸ்வரன்.

* ஒரு கிராமமே புதைந்து கொண்டிருக்கிறது — இக் கட்டுரை கூடுதாழை மக்களின் உணர்ச்சியைப் படம் பிடித்துக் காட்டியது: "அனைத்தும் மணலில் புதைஞ்சு போன பிறகு, எங்க பிணத்தைத் தோண்டி எடுக்கத்தான் இந்த அரசாங்கம் வரும் போலிருக்கிறது....!" இவ் வரிகள் என் உள்ளத்தை உருக்கின. இக் கட்டுரை வெளியான பிறகாவது அரசாங்கம் நடவடிக்கை எடுக்குமா?

வேலூர். பொ. பொற்செல்வன்.

* கூடுதாழையில், புதைந்து கொண்டிருக்கும் வீட்டின் உரிமையாளருடைய மனம் எவ்வளவு நொந்து போயிருக்கும். நமக்கு அந்த நிலை ஏற்பட்டால்....? நினைத்துப் பார்த்தேன்: உடலே பயத்தில் சிலிர்த்து விட்டது.

போளூர். கே. அரியநாதன்.

## வட்டமேஜை

* இந்த வார கல்கி இதழில் திரு. ஜி. கே. எம். அவர்களின் பேட்டியைப் படித்தேன். தாங்கள் அவரிடம் துருவித் துருவிக் கேள்வி கேட்டதும், அவரும் மிகவும் சாமர்த்தியமாகப் பதில் சொன்னதும் மிக அருமையாக இருந்தது. மக்களின் நெஞ்சில் ஏற்படும் ஐயங்களைத் தாங்கள் விரிவாகக் கேட்டதைக் கண்டு பாராட்டுகிறேன்.

அரக்கோணம். எஸ். பி. வெங்கட்ராமன்.

* இந்தி பேசும் மக்கள் வாழ் பகுதிகளில் கூடத் தோற்ற பின்பும், மீசையில் இன்னமும் மண் ஒட்டவில்லை என்று கூறும் காங்கிரஸ்காரர்கள் நல் ஆன்ம சோதனை செய்து, தவறுகளை நீக்கி, தங்களைச் சுத்திகரம் பண்ணும் வரை, கட்சி மக்களிடம் வேர் ஊன்றப் போவதில்லை என்று தயவு செய்து மூப்பனாரிடம் சொல்லி வையுங்கள்.

சென்னை — 56. சுந்தரிசன்.

# எல்லாவற்றுக்கும் அரசாங்கத்தையே எதிர்நோக்குவானேன்?

* "பயங்கரமான மானுடத் துயர்" தலையங்கத்தில், மற்றவர் போல் அமெரிக்கா மீது மட்டுமே குற்றம் சொல்லாமல், அணு ஆயுதங்களும், அழிவு விஞ்ஞான வளர்ச்சியும் காரணம், இவற்றைக் குறைக்க வேண்டும் என்று சொன்ன உங்களை மிகவும் பாராட்டுகிறேன்.

இராணிப்பேட்டை. பேப்பர். கார்த்திக்.

* விம்பிள்டனில் வெற்றி பெற்றவர்களின் பின்னால், அவர்களின் வெற்றிக்கு வேண்டிய 'வைட்டமின்' பயிற்சியைக் கொடுத்த பயிற்சியாளர்களைப் பாராட்டியது... மனங்கவர்ந்தது...

தஞ்சாவூர். கவிஞர் ககன்.

* 'முரளி' மனிதாபிமானம் மிக்கவன் என்பதைத் 'தமயந்தி' தம் படைப்பில் அழுத்தமாகவே சொல்லியிருக்கிறார். நெஞ்சை நெருடும் அருமையான சிறுகதை!

மேலகிருஷ்ணன்புதூர். கே. பிரபாலிங்கேஷ்.

* கரையும் முகங்கள் யதார்த்தம் நிரம்பிய சிறுகதை! அதனூடே இலேசான நகைச்சுவையை இழையோட விட்டுப் போலிகளை நன்றாகவே நையாண்டி செய்துள்ளார் கதாசிரியர். கதாசிரியரின் நோக்கை அப்பட்டமாகப் படம் பிடித்துக் காட்டிய மருதுவுக்குப் பாராட்டுக்கள்.

சென்னை — 17. எஸ். சுப்ரமணியன்.

* மூப்பனார் பேட்டி படித்தேன். வெகு சாமர்த்தியமாய்க் கேள்விகள் கேட்டு, உங்கள் நிருபர் அவரைத் திணறடிக்கப் பார்த்த போதும், மேலிடத்தையே காரணம் சொல்லி மூப்பனாரும் சமாளித்திருக்கிறார். சபாஷ்! முதல்வர் பதவிக்குத் தகுதியானவர்தான்!

பழனி — 15. கி. நாகராஜன்.

* 'வீடு' திரைப்பட விமர்சனத்தில் அர்ச்சனாவின் நடிப்பை அல்லது நடிப்பின்மையைப் பற்றி இனிமேல் விமர்சித்தால் அடிக்க வருவீர்கள்' என்று நாசூக்காகக் குறிப்பிட்டிருந்தது பாராட்டும்படியிருந்தது.

காரைக்குடி. அவைநாயகன் எஸ். தர்மாபதி.

* தமிழகத்தைச் சார்ந்த நல்லுச்சாமி அண்ணாவி, ஒலிம்பிக்கில் கலந்து கொள்ளும் அளவிற்குத் தேர்ச்சி பெறமுடிந்ததுவே நமக்குப் பெருமை. 'சரியான விகிதத்தில் தன்னடக்கமும் தன்னம்பிக்கையும் நிறைந்த பேச்சை நோக்குகையில் நிச்சயம் ஏதாவது ஒரு பதக்கம் வாங்குவார் என்றே நம்பத் தோன்றுகிறது.

திருப்பரங்குன்றம். டி. கே. சுப்பிரமணியன்.

* 'ஒரு கிராமமே புதைந்து கொண்டிருக்கிறது' என்ற கட்டுரை, கூடுதாழையின் சோகத்தை அப்படியே எழுத்துக்களில் வடித்துள்ளது. மணலைக் கட்டும் மார்க்கங்கள் பல இருக்க, அங்கு அதிகரித்துவரும் அழிமானத்தைக் கட்டுப்படுத்த முனையாமல், அரசையே எதிர்நோக்கியிருக்கும் இயலாமையைக் கண்டு அதனையும் விட வருத்தம் ஏற்படுகிறது. மணலுக்கு அணையிடும் மரங்களும், புதர்ச் செடிகளும் பல உள: அவற்றின் மூலம் ஒரு வருமானமும் பெறலாம். இந்த மரங்கள் வளர்கையிலேயே மணலுக்குப் போர்வையாக வளர்ந்து மூடிடும். நிம்பா என்ற தும்மட்டிக்காய் ஒரு அருமையான எண்ணெய் வித்துப் பயிர்; சோப்புச் செய்திடுவதற்கு ஏற்ற எண்ணெய் தரும். அதனுடன் சில புற்களையும் வளர்த்து விட்டால், மணல் வீசும் நிலையை ஒரு 'கட்டுக்குள் கொண்டு வரலாம். இக்கிராம மக்கள் விரும்பினால், இவற்றின் சாகுபடி விவரத்தையும், விதை கிடைக்கும் இடங்களையும் தெரிவிக்கத் தயார். ஆனால், ஒருங்கிணைந்த 'முயற்சிகளால்தான் முழுமையான வெற்றி பெற முடியும் என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

சென்னை — 61. பி. எஸ். மணி (விவசாயத் துறையிலிருந்து ஓய்வு பெற்ற இணை இயக்குனர்)



கணவன்: பக்கத்துப் போர்ஷன்காரர் முன்னேயெல்லாம் குடிச்சிட்டு வந்து பாத்திரம் பண்டங்களை உருட்டி ஏக கலாட்டா செய்வாரே. இப்ப சத்தத்தையே காணோமே?

மனைவி: பாத்திரம் பண்டமெல்லாம் அடகுக் கடையில் இருக்கறப்போ இங்கே எப்படிச் சத்தம் வரும்?

— கே. ரத்னம்.



''லஞ்சத்தை ஒழிப்போம் என்கி றார்களே... நாற்பது ஆண்டுகளாக நாங்கள் பாடுபட்டு வளர்த்ததை ஒழிக்க இவர்கள் யார்...?''

— ஏ. ஆர். வீரராகவன்.



அவர்: ஏன் சார் ஆபீசுக்கு மாறு வேஷத்திலே போறீங்க?

இவர்: நான் டி. வி. நாடகங்களுக்குக் கதை எழுதறது எப்படியோ எல்லா ருக்கும் தெரிஞ்சுப் போச்சு.

— வி. ஜி. மகேஷ்.

''காதலிச்சவளையே கட்டிக்கிட்டது தப்பா... ஏன்?''

''ஐம்பது பைசாவுக்குச் சுண்டல் வாங்கித் தா மூக்காலே அழுதவருதானே நீங்கன்னு... அடிக்கடி சொல்லிக் காட்டறா!''

குற்றாலம் அமிதா.



விநியோகஸ்தர்: ''அரைத்தமாவுன்னு படத்துக்குப் பேர் வைக்கும் போதே எனக்குத் தெரியும்...''

தயாரிப்பாளர்: ''என்ன தெரியும்?''

விநியோகஸ்தர்: ''ஊத்திக்கும்னு!''

— எல். செந்தில் குமார்



# உங்கள் குழந்தைக்கு
# அளியுங்கள் ஸெரிலாக் அனுகூலம்



## திட உணவின் தொடக்கத்திலிருந்தே

உங்கள் குழந்தைக்கு நான்காம் மாதத்திலிருந்தே பாலோடு திட உணவும் தேவை. அப்போது ஸெரிலாக் அனுகூலம் அளியுங்கள்.

**போஷாக்கு அனுகூலம்:** ஒவ்வொரு முறை ஸெரிலாக் ஊட்டும் போதும், புரதச்சத்து, கார்போஹைட்ரேட், கொழுப்பு, வைட்டமின், மற்றும் தாதுப் பொருட்கள் ஆகிய எல்லா போஷாக்குச் சத்துக்களும் சரியான விகிதத்தில் உங்கள் குழந்தைக்குக் கிடைக்கிறது.

**சுவை அனுகூலம்:** ஸெரிலாக் சுவையில் குழந்தைகளுக்குக் கொள்ளை ஆசை.

**தயாரிப்பதில் அனுகூலம்:** ஸெரிலாக் ஏற்கனவே பதமாக்கப்பட்டது; பாலும் சர்க்கரையும் கலந்தது. காய்ச்சி ஆறிய நீரில் கலந்தாலே போதும்.

**தேர்ந்தெடுக்க அனுகூலம்:** இப்போது ஸெரிலாக், மூன்று வெவ்வேறு வகைகளில்!

*சுகாதாரமான முறையில் தயாரிக்கவும், சரியான விகிதத்தில் போஷாக்கு கிடைக்கவும் டின்னில் தரப்பட்டுள்ள குறிப்புகளை தயவு செய்து பின்பற்றுங்கள்.*




6 மாதங்களிலிருந்து




4 மாதங்களிலிருந்து




6 மாதங்களிலிருந்து

இலவசம்
ஸெரிலாக் பேபி கேர் புத்தகம்
எழுதுங்கள்: ஸெரிலாக்,
தபால் பெட்டி எண். 3
புது தில்லி-110008




**ஸெரிலாக் பராமரிப்பு: முழுமையான போஷாக்கு, சிறப்பான சுவை**

RK SWAMY/FSL/5112/TAM

## நீங்கள் கேட்டவை — தராசு

* எஸ். பரமசிவம், சீர்காழி.

? 'தலைவருக்கும் ஜெயலலிதாவுக்கும் இடையே ஒரு வகை அன்பு (லவ்—ஹேட்) நிலவி வந்தது; இல்லி ஹோட்டல் அறையில் இருவரும் பேசிக் கொண்டிருக்கும் போது நான் வெளியே வந்து விடுவேன்; தலைவர் அவரைப் பெரிதும் விரும்பினார் (ஹிலைக்ட் ஹர் கம்பெனி) என்று பண்ருட்டியார் பேட்டி கொடுத்திருப்பது யாருக்கு இழுக்கு?

! தமிழகத்தில் ஒருவர் பாக்கியில்லாமல் அத்தனை பேருக்கும்தான். உண்மைகள் நம்மைத் தாக்கும் போது பல சமயம் அதிர்ச்சியாகவும் மனக் கசப்பாகவும் இருக்கும். ஆனால் உண்மைகளைப் பூசி மெழுகுவதால் யாருக்கும் பலனில்லை. உண்மைகள் விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தி நம்மை மீண்டும் தவறுகள் செய்யாமல் காப்பாற்ற வேண்டும். ஜனநாயகத்தில் இந்த மனப் பக்குவம் மிகவும் அவசியம். தமிழக மக்கள் அதைப் பெற வேண்டும்.

* அ. ஜமால் மொய்தீன், சென்னை — 52.

? முதல் ராக்கெட்டின் தோல்விக்கான குறைகளைக் களைந்து அனுப்பப்பட்ட இரண்டாவது ராக்கெட்டும் கடலில் விழுந்து விட்டதே. இவ்வளவு கோடி நஷ்டம் இந்தியாவுக்குத் தேவையா?

! செயற்கைக் கோள்களை நாமே விண்வெளிக்கு அனுப்புவதை விட வேறு நாட்டினரை அனுப்பச் செய்வது மலிவு. அதை விட மலிவு வேற்று நாட்டின் செயற்கைக் கோளை வாடகைக்கு எடுத்துக் கொள்வது. ஆனால் செயற்கைக் கோளை விட அதை விண்வெளிக்கு அனுப்ப உதவும் ராக்கெட் விஞ்ஞானம், ராணுவ ரீதியில் முக்கியத்துவம் வாய்ந்தது. அதனால்தான் இந்தியா விடாமல் இந்தத் துறையில் கவனம் செலுத்துகிறது. அணிசேரா நாடு என்ற கொள்கையை விடாத வரையில் இது போன்ற செலவுகளை, நஷ்டங்களைக் குறைக்க முடியாது.

பண்ருட்டியார் பேட்டி யாருக்கு இழுக்கு?

* ஃபிர்தௌஸ் பாரதி நஸீர், கோவை.

? இப்போது கொலைகள் சர்வசாதாரணமாகி விட்டதற்கு கிரைம் நாவல்கள் ஒரு காரணம் என்று கூறலாமா?

! ஆட்டோ சங்கர் கூட கிரைம் படங்களை அதிகமாகப் பார்த்ததைத்தான் குறிப்பிட்டிருக்கிறார். கொடூரமான காட்சிகளையுடைய சினிமாக்கள் ஏற்படுத்தும் பாதிப்பு போல அந்த அளவுக்கு நாவல்கள் பாதிப்பை ஏற்படுத்தாது. என்றாலும் 'எழுத்துச் சுதந்திரத்தைத் துஷ்பிரயோகம் செய்ய மாட்டேன்' என்று ஒவ்வொரு எழுத்தாளரும் உறுதி மொழி எடுத்துக் கொள்வது நல்லதே.

* கே. கணேஷ், சென்னை — 6.

? மத்திய அரசில் தமிழகத்தைச் சேர்ந்த ஒருவர் கூட காபினெட் அமைச்சராக நியமிக்கப்படாததன் காரணம் என்ன?

! அவசரப்படாதீர்கள். இதுவரை ராஜீவ் இருபத்தைந்து முறைதானே மந்திரி சபையை மாற்றி அமைத்திருக்கிறார். இன்னும் எத்தனையோ சான்ஸ் இருக்கிறது நம்மவருக்கு!

* உஷாராணி மலர்மன்னன், நெய்வேலி — 3.

? அரசு அளித்த பிறந்த நாள் சலுகையை நெல்சன் மண்டேலா நிராகரித்து விட்டாரே?

! அது அவரது தன்மானத்தை உணர்த்துகிறது. இருபத்தாறு வருஷ சிறைவாசத்துக்குப் பிறகும் நிறவெறி அரசுக்கு வளைந்து கொடுக்காத மாவீரன் மண்டேலா.

* கு. நாகராஜன், குருசாமிபாளையம்.

? 'தமிழ்நாட்டில் காங்கிரஸ் ஆட்சிக்கு வந்தால் பனியன் வரியை ரத்து செய்வோம்' என்று மத்திய அமைச்சர் அருணாசலம் கூறியுள்ளாரே?

! காங்கிரஸ் ஆட்சியில் எல்லாரும் குறைந்தபட்சம் பனியனாவது அணிய வேண்டும் என்று அருணாசலம் கருதுகிறார் போலிருக்கிறது. வரவேற்கப்பட வேண்டிய நல்ல முடிவுதான். ஆனால் அதை அமுல்படுத்த இவர்கள் ஆட்சிக்கு வரும் வரை காத்திருக்க வேண்டிய அவசியமில்லையே. இப்போதே செய்யலாமே!

* சுநீதா, மேல்பட்டி.

? அரசு ஊழியர்கள் கோரிக்கைகளுக்குத் தீர்வு காண வேண்டும் என்று இன்று முழங்கும் கருணாநிதி, 1973 — இல் பட்டதாரி ஆசிரியர்கள் கோட்டைக்கு ஊர்வலம் சென்ற போது 483 ஆசிரியர்களைச் சிறை



* படியன் வரி



* அன்று முதல்வர்



* யா நக்த இபுக்த?



* மாவீரன்



* நியாய நியமனம்

வில் தள்ளியவர்தானே?

! அப்போது அவர் முதல்வர்; இப்போது தேர்தலை எதிர்நோக்கும் எதிர்க் கட்சித் தலைவர்!

* கே. வி. துளசிபாய், விழுப்புரம்.

? புதிதாக உருவாக்கப்பட்டுள்ள உணவுப் பாதுகாப்புத் துறையின் மந்திரி ஜகதீஷ் டைட்லருக்கு இன்னும் தனி அலுவலகமே ஒதுக்கப்படவில்லையாமே?

! தனி அலுவலகம் இருக்கட்டும்; அவர் இலாக்காவில் என்னென்ன விஷயங்களைச் சேர்க்க வேண்டும் என்றே தீர்மானமாகாமல், அதற்கு முன்பே அப்படி ஓர் துறையை உருவாக்கி, அமைச்சரையும் நியமித்தாகி விட்டது!

* சி. ஆர். நாகராஜன், வளவனூர்.

? மகாராஷ்டிர மாநிலத்தில் மீண்டும் ராமராவ் அடிக் அமைச்சர் ஆகியிருப்பது பற்றி...?

! RUM-RAO-ADDICT என்று அவரைப் பற்றி சமீபத்தில் வெளியான ஒரு கார்ட்டூன் தான் நினைவுக்கு வருகிறது.

* ஆர். வி. எஸ். மணி, சென்னை — 4.

? நிதி என்பதைப் பணமாகத்தான் கொடுக்க வேண்டுமா? கல்கி மூலம் மற்ற கட்சியினரை மட்டம் தட்டுவதும் தங்களுக்குப் பிடித்த கட்சியைத் தகுதிக்குமேல் போற்றிப் புகழ்வதுமே பெரிய நிதி அல்லவா?

! எதிர்க்கட்சிகளைக் குறை கூற பத்திரிகைகளுக்கு வாய்ப்பு குறைவாகத்தான் இருக்கும். ஆட்சியில் இருப்பவர்களை விமர்சிக்கும் வாய்ப்புக்களே அதிகம் இருக்கும். அதனால் உங்களுக்கு அப்படி தோன்றுகிறது. இதே தி.மு.க.வும் கலைஞரும் ஆட்சியில் இருந்த கால கட்டத்துக் கல்கி பத்திரிகைகளைப் புரட்டிப் பார்த்தால் உங்களுக்குத் தெளிவு பிறக்கும். கல்கி எப்போதுமே ஆட்களைப் பார்ப்பதில்லை. அவர்களுடைய இன்றைய சொற்களையும் செயல்களையுமே விமர்சிக்கிறது. அதன் குறிக்கோள் நாட்டு நலன் ஒன்றே. எங்களிடமிருந்து நீங்கள் கருத்து மாறுபடலாம். ஆனால் எங்கள் நல்லெண்ணத்தைச் சந்தேகிக்கும் போது நீங்கள் மாபெரும் தவறு செய்கிறீர்கள்.

* மு. செந்தில்வாசன், திருமங்கலம்.

? டாக்டர் லலிதா காமேஸ்வரனை மருத்துவப் பல்கலைக் கழகத்தின் துணை வேந்தராக நியமித்திருப்பது குறித்து....?

! அனுபவமும் திறமையும் இணைந்தவர். நியாயமான நியமனம்.

* வி. மாணிக்கம், மயிலாடுதுறை.

? ஒரு ஜோக்?

! புதுவை அபராஜிதனை உதவிக்கு அழைக்கிறேன். ஜோக்கை ஜோக்காகவே எடுத்துக் கொண்டு சிரித்து விடுங்கள்!

ஒருவர்: உடன்கட்டை ஏறுவதை ஏன் தடை செய்யச் சொல்றாங்க?

மற்றொருவர்: கணவன்மார்கள் எல்லாரும் இறந்து போன பிறகாவது — மேலுலகிலாவது நிம்மதியாய் இருக்கட்டுமே என்று தான்!

* ரூ. 15 பரிசு பெறுபவர்:

கே. வி. துளசிபாய்,
29, மேல் ஹனுமார் கோவில் தெரு,
விழுப்புரம் — 605 602.

தராசு பதில்கள் — மீண்டும் தீபாவளி சிறப்பிதழில் தொடங்கும்.



# கல்கி

1988 ஜூலை 31
மலர் 46 இதழ் 53
விபவ ஆடி 16




## மக்களின் அறியாமை அரசியல்வாதிக்கு ஆதாயம்!

நமது நாட்டின் மிகச் சிறந்த சிந்தனையாளர் – செயல் வீரர்களுள் ஒருவரான பால்கி வாலா, பம்பாய்ப் பல்கலைக் கழகத்தில் மிக முக்கியமான ஒரு விஷயத்தைப் பற்றிப் பேசியிருக்கிறார்: ''கல்விக்கு முக்கியத்துவம் தராமல் ஆலைகளையும் தொழிற்சாலைகளையும் உருவாக்குவதற்கு முன்னுரிமை தந்தது இந்தியா செய்த மாபெரும் தவறு. இது இந்தியாவின் வளர்ச்சி வேகத்தைத் தடுத்து, பின்னடையச் செய்திருக்கிறது. நாட்டு மக்களின் ஆற்றலை, நாட்டின் வளர்ச்சியாக உருமாற்றக் கூடியது கல்வி ஒன்றே. முன்னேறி வரும் நாடுகள் பல இதனைப் புரிந்து கொண்டு கல்விக்கே முதலிடம் தருகின்றன. இந்தியாவின் எதிர் காலத்தைக் கல்வியும் அதன் தரமுமே நிர்ணயிக்கும்.''

'கல்வியின் தரம்' என்று பால்கி வாலா குறிப்பிட்டது கவனத்துக்குரியது. எழுதப் படிக்கத் தெரிந்திருப்பது வேறு; கல்வி என்பது வேறு. டாக்டர் பி. எம். பார்க்கவா கூறுகிறார்: ''நமது நாட்டில் சுதந்திரம் பெற்று நாற்பதாண்டுகளுக்குப் பிறகும் கல்வி பெறுவது என்பது மூன்று சதவீதம் மக்களின் விசேஷ உரிமையாகவே இருந்து வருகிறது. இந்த மூன்று சதவீத மக்கள்தான் பள்ளிக்கூடம் முடித்து, கல்லூரிகளிலும் சேருகிறார்கள். பட்டதாரிகளாகி வேலையில் அமர்கிறார்கள் அல்லது வேலை வாய்ப்புக்கு அலைகிறார்கள். மற்ற தொண்ணூற்றேழு சதவீதம் மக்களின் படிப்பு, எட்டாம் வகுப்பைத் தாண்டுவதில்லை; அதற்குப் பல ஆண்டுகள் முன்பே கூட முடிந்து விடுகிறது!''

ஏன், உலக வங்கியே இந்தியாவை எச்சரித்துள்ளது: ''இந்தியா, தீவிர முயற்சி எடுக்காவிட்டால் 'படிப்பறிவற்ற உலக மக்களில் பாதிப் பேர் இந்தியாவில்தான் இருக்கிறார்கள்' என்ற அவப்பெயரை அந்நாடு இன்னும் பதினைந்து ஆண்டுகளுக்குள் சம்பாதித்துக் கொள்ளும்!''

நமது முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் கல்விக்கான ஒதுக்கீடு 7.5 சதவீதம் என்றும் இப்போதைய ஐந்தாண்டுத் திட்டத்தில் 1.2 சதவீதம் என்றும் குஷ்வந்த் சிங் எடுத்துக் காட்டுகிறார்!

பசுமைப்புரட்சி செய்து பஞ்சத்தையும் பட்டினிச் சாவையும் விரட்டியது போல இன்று கல்விப் புரட்சி செய்து அறியாமை அரக்கனை நாட்டை விட்டு விரட்டியாக வேண்டும். யுத்தம் என்பது வந்து விட்டால் நாட்டு மக்கள் அனைவரது கவனமும்






நாட்டைப் பாதுகாப்பதிலேயே திசை திருப்பி விடப்படுவது போல, இன்று அறியாமை அரக்கனை எதிர்த்து நாம் ஒருமுகமாகப் போராட அவசியம் இருக்கிறது. மத்திய, மாநில அரசுகள் எல்லாமே, அடுத்த இரண்டு மூன்று ஆண்டுகளுக்கு ஒரு யுத்த கால முயற்சி போல், மக்களுக்குக் கல்வி அளிப்பதிலேயே முழுக் கவனமும் செலுத்த வேண்டும். அரசு யந்திரம் முழுமையாக இதற்கே முடுக்கி விடப்பட வேண்டும். வரிப் பணத்தின் மிகப் பெரும் பகுதி இதற்கே செலவாக வேண்டும். அமைச்சர்கள், அதிகாரிகள் ஆகிய அனைவரது கவனமும் இதில் இருக்க வேண்டும். ஒரு தீவிர முயற்சி செய்து இந்தப் பிரச்னையை வெற்றி கண்ட பிறகு, இன்னொரு பிரச்னையை எடுத்துக் கொண்டு அதைத் தாக்கலாம். ஆனால் இப்போது என்ன நடக்கிறது? வரிப்பணம் மட்டுமின்றி, அதிகாரிகள், அமைச்சர்கள் ஆகியோரின் கவனமும் பல்வேறு பிரச்னைகளில் சிதறிப் போகிறது. எதிலும் தீவிர ஈடுபாடுமில்லை; எதற்கும் போதிய அளவு நிதி வசதியும் இல்லை. எனவே பலனும் கிடைப்பதில்லை. கிடைக்கிற அற்ப சொற்ப பலன், சீக்கிரமே கை நழுவிப் போய் விடுகிறது. செல்வமும் மனித முயற்சியும் வீணாகிறது.

அறியாமைப் பிரச்னையை நாம் வெற்றி கண்டால் அதனுடன் கூடவே வேறு பல பிரச்னைகளும் ஒழிந்து போகும் என்பது கவனத்துக்குரியது. ஜாதி மத வேற்றுமைகள்; பிராந்திய மனப்பான்மைகள், மக்கட் தொகை பெருக்கம், முதலியன தாமாகவே மறைந்து போகும். ஒருமைப்பாடு வளரும், சுகாதாரம் மேம்படும்; நோய்கள் குறையும்; சுற்றுப்புறத் தூய்மை பாதுகாக்கப்படும். இப்படி இன்றுள்ள எத்தனையோ பல பிரச்னைகள் அறியாமைப் பிரச்னையுடன் சேர்ந்து விரட்டி அடிக்கப்படும். இவற்றுக்காக ஆகும் செலவுகளும் குறையும்.

எதற்கு முக்கியத்துவமும் முதலிடமும் தர வேண்டும் என்று சுதந்திரம் பெற்று நாற்பதாண்டுகள் ஆகியும் நாம் புரிந்து கொள்ளவில்லை. 'கம்ப்யூட்டர்களைக் கொண்டு வந்து விட்டால் வேலையில்லாத் திண்டாட்டம் பெருகாது; வித்தியாசமான வேலை வாய்ப்புக்கள் உருவாகும்' என்கிறார்கள். படிப்பறிவில்லாப் பாமரர்கள் கம்ப்யூட்டர்களை எப்படிக் கையாள்வார்கள்? வயல்களிலும் தொழிலகங்களிலும் தானியங்கு இயந்திரங் களை எல்லாவற்றுக்கும் பயன்படுத்த ஆரம்பித்தால் எட்டாம் வகுப்பு தாண்டாத தொண்ணூற்றேழு சதவீதம் மக்களின் கதி என்ன? மக்களுக்குக் கல்வி அறிவு தராமலே அவர்களை இருபத்தோராம் நூற்றாண்டுக்கு எப்படி தயார்ப்படுத்துவது?

ஒருவேளை இவர்களை அறியாமையில் ஆழ்த்தி வைத்திருப்பதில் அரசியல்வாதி ஆதாயம் காண்பதுதான் காரணமோ?

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

# அனந்தசயனத்தின் அதிசய மகள்





• "எப்போதும் ஒரு கேள்விக் குறி" — பத்மா ஸேத் எழுதிய ஒரு கவிதைக்கு அவரே வரைந்த ஓவியம்.

**ப**த்மா ஸேத் ஆச்சர்யங்கள் நிறைந்த அபூர்வப் பெண்மணி. முன்னாள் மக்களவைத் தலைவர் அனந்தசயனம் ஐயங்காரின் மகள். சித்தூரில் பிறந்து ஆரம்ப போதனா மொழி தெலுங்காக இருந்தாலும் 'நான் சுத்தத் தமிழச்சிதான்' என்கிறார். வடக்கத்தியரை மணந்து தில்லிவாசியாக ஆன போதிலும் வீட்டில் குழந்தைகளிடம் தமிழில் தான் பேசுகிறார். 'சாப்பாடு, தோற்றம், எண்ணங்கள், எல்லாவற்றிலுமே தமிழர் பழக்க வழக்கங்கள்தாம்.

தமது தந்தையை மிகுந்த பக்தி சிரத்தையுடனும் அபிமானத்துடன் நினைவு கூர்கிறார். "தென்னிந்தியப் பண்பின் உறைவிடமாக இருந்தார். தமக்கென்று ஒரு துரும்பைக் கூட சேர்த்து வைக்க ஆசைப்படாதவர். எங்கள் வீட்டில் வாரச் சாப்பாடு சாப்பிட்டே எத்தனையோ ஏழைச் சிறுவர்கள் இன்று பெரிய பதவிகளில் இருக்கிறார்கள்" என்கிறார்.

சுதந்திரப் போராட்டத்தில் தந்தை கலந்து கொண்டு அடிக்கடி சிறைக்குச் சென்று வந்தது இவர் மனத்தில் பெரிய பாதிப்பை ஏற்படுத்தியது. சமுதாயப் பணியாற்றத் தூண்டியது. கல்லூரிப் படிப்பு முடிந்த கையோடு துர்க்காபாய் தேஷ்முக்கிடம் சேர்ந்து அவரது சமூக சேவைகளில் உதவ ஆரம்பித்தார். ஆசார அனுஷ்டானம் காத்த குடும்பத்தில் வளர்ந்த இவர் ஒரு வடக்கத்தியரைத் திருமணம் செய்து கொண்ட போது, தந்தை செய்த ஒரே உபதேசம்: "உன் தாயாராகக் கருதி உன் மாமியாரை நீ நன்றாய்க் கவனித்துக் கொள்ளணும்!"

இன்று பத்மா ஸேத் ஒரு குடும்பத் தலைவிதான். ஆனால் "உலகத்திலே இத்தனை கஷ்டங்கள் இருக்கும் போது வீட்டை மட்டும் கட்டிண்டு எப்படி உட்கார்ந்திருக்க முடியும்?" என்று கேட்பவரும் கூட!

இவருடைய ஆற்றல்களின் பரிமாணங்களை இவரே உணர்வாரா என்பது சந்தேகம். பால பவனம் என்ற குழந்தைகள் பள்ளியின் இயக்குனரான இவருடைய நிர்வாகத்தின் திறன், பள்ளியின் கலையழகு மிகுந்த ஒவ்வொரு மூலையிலும் பளிச்சிடுகிறது. அகில இந்திய மாதர் மாநாட்டின் பொதுக் காரியதரிசியாகவும் இவர் பணியாற்றுகிறார். தில்லியில் பெண்களுக்காகக் குரல் எழுப்புகிறவரில் முன்னணியில் நிற்பவர் பத்மா ஸேத்தான். இதோடு இவர் ஒரு வழக்கறிஞர், பத்திரிகை ஆசிரியர், பேச்சாளர், கவிஞர், ஓவியர். போதாக் குறைக்கு முறையாகக் கர்நாடக சங்கீதம் பயின்றவர்.

"ஒரு மதராஸிக்கு இத்தனை வெற்றியா?" என்கிற புகைச்சல் நடு நடுவில் கிளம்பாமல் இருக்காது. அதையெல்லாம் நாம் பொருட்படுத்தாமல் காரியமே கண்ணாக இருந்தோமானால் முணுமுணுக்கிறவன் பேச்சு நம்மை என்ன செய்ய முடியும்?" என்று பத்மா ஸேத் சிரிக்கிறார்.

இவர் நடத்தும் பால பவனத்தில் இந்திய கலாசாரத்தையும் ஒருமைப்பாட்டையும் கலைநயத்துடன் விளையாட்டு ரூபத்திலேயே குழந்தைகள் கற்றுக் கொள்கிறார்கள். பல மாநிலங்களிலிருந்து அவ்வப்போது கலைஞர்கள் வரவழைக்கப்படுகிறார்கள். குழந்தைகளின் கற்பனா சக்தி சுயமாக வளரவும் அவர்கள் சுயமாகச் சிந்தித்துச் செயல்படவும் இந்தப் பள்ளி பெரிதும் உதவுகிறது.

— வாஸந்தி

புகைப்படம்: வி. எஸ். ராமநாதன்.

*இவர்தான் முதல்வர்:*

# விட்டுக் கொடுப்பாரா கருணாநிதி?



ஜெயலலிதாவும், ஜானகியும் ஒருவரை ஒருவர் தாக்கிப் பேசி வருவதில் அ. இ. அ. தி. மு. க. ஆட்சியின் ஊழல்களை அம்பலப்படுத்தி வருகிறார்கள். இதன் விளைவாக உண்மையான எம். ஜி. ஆர். தொண்டர்கள் இந்த இருவரையும் புறக்கணிப்பார்கள். அவர்களுக்குப் புகலிடமாகத் தி. மு. க. அமையும். ஏனெனில், இத்தகையோர் எம். ஜி. ஆருக்குப் பின்னால் வரும் முன்னர் தி. மு. க. வில்தான் இருந்தார்கள். மறுபடியும் தாய் வீட்டிற்குச் சந்தடியின்றித் திரும்பி விடுவார்கள். எனவே தி. மு. க. வுக்கு வோட்டுக்கள் அதிகரிக்கப் பிரகாசமான வாய்ப்பு.

அ. தி. மு. க. வின் எம். ஜி. ஆர். வோட்டுக்களில் கணிசமான பகுதி தி. மு. க. வுக்குத் திரும்பியபின் மீதமிருப்பதைத்தான் ஜானகியும் ஜெயலலிதாவும் சொந்தம் கொண்டாட முடியும். இப்படி எம். ஜி. ஆரின் வோட்டுக்கள் மூன்றாகப் பிரியும் போது தி. மு. க. தவிர வேறு யாருமே வெற்றி வாகை சூட வாய்ப்பு இல்லை. கூட்டணி ஆட்சியைத் தமிழக மக்கள் விரும்ப மாட்டார்கள். எனவே ஜெயலலிதா — காங்கிரஸ் கூட்டணி ஆட்சி அமைக்கவும் வாய்ப்பில்லை.

ஆனால் ஒன்று.

கடந்த பத்தாண்டுகளாகத் தி. மு. க. வின் சுயபலம் தவிர, புதியவர்கள் தி. மு. க. வுக்கு வாக்களிக்காததன் காரணம் கலைஞராகத்தான் இருக்க வேண்டும். இம்முறை கலைஞர் தாம் முதல்வராக விரும்பவில்லை: அன்பழகன்தான் முதல்வர் என்று அறிவிப்பாரெனில் தி. மு. க. அறுதிப் பெரும்பான்மை பெற்று உறுதியாக ஆட்சி அமைக்கும்.

கலைஞர் இப்போது, 'ஊழலற்ற, அரசியல் தலையீடற்ற ஆட்சி தருவேன்' என்று சொன்னால் கூட மக்கள் அதை நம்பத் தயங்குகிறார்கள். இதையே அவர் அன்பழகனை முதல்வராக்கிச் சொன்னால் மக்கள் தி. மு. க. வை நம்புவார்கள். கலைஞர் தி. மு. க. வுக்காகத் தமது முதல்வர் நாற்காலி மீதான ஆசையைத் துறப்பார் எனில் உறுதியாகத் தி. மு. க. தான் ஆட்சி அமைக்கும். அன்பழகன்தான் முதல்வர்.

— ஜி. ஆர். குணசேகரன்,
சென்னை — 14.

# கருணாநிதிதான் முதல்வர்!

— கல்கி வாசகர்கள் தீர்ப்பு!



"இவர்தான் முதல்வர்" பகுதியில் ஆர்வத்தோடு பங்கேற்ற ஆயிரக்கணக்கான வாசகர்களில் அறுபத்தேழு சதவிகிதத்தினர், கலைஞர் மு. கருணாநிதியே அடுத்த தமிழக முதல்வராக விளங்க வேண்டும் என்று விரும்பி எழுதியுள்ளனர்.

கருணாநிதிக்கு அடுத்தபடியாக எட்டு புள்ளி இரண்டு சதவிகிதம் வோட்டுக்களைப் பெற்றுள்ளவர் மூப்பனார். அவரை அடுத்து ஜெயலலிதா (7.8%)

பெயர் குறிப்பிடாமல் பொதுவாக நல்லாட்சி வரவேண்டும் என்று சிலரும் கவர்னர் ஆட்சியே நீடிக்க வேண்டும் என்று சிலரும் எழுதியிருந்தனர். இவர்களுடைய வோட்டுக்கள் கணக்கில் சேர்க்கப்படவில்லை.

ஒரு வோட்டுப் பெற்றவர்கள் வரிசையில், ஹெக்டே, சுந்தர்ஜி, டாக்டர் ராம்தாஸ், உமாநாத், எம். எஸ். உதயமூர்த்தி, அலெக்ஸாண்டர், பா. ராமச்சந்திரன், பொன் விஜயராகவன், ம. பொ. சி., பி. எச். பாண்டியன் ஆகியோர் இடம் பெறுவது ரசமான விஷயம்.

திருச்சியில் நேருக்கு நேர்:

# யேசுதாஸ் சினிமாவுக்கு ஏன் இசையமைப்பதில்லை?

**திருச்சி ஐயப்ப சங்கத்தின் சார்பாக, கனகசபாபதி என்பவர் பாடகர் யேசுதாசுடன் நேருக்கு நேர் நிகழ்ச்சி ஒன்றினை ஏற்பாடு செய்திருந்தார். அதிலே இடம் பெற்ற சில கேள்விகளும், யேசுதாசின் பதில்களும்:**

கேள்வி: ஐயப்பனிடம் உங்களுக்கு ஈடு பாடு வந்தது எப்படி?

பதில்: இசைக் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த போது எனக்கு ஒரு நம்பூதிரி நண்பர் கிடைத்தார். நாங்கள் மாலை நேரங் களில் பேசும் போதெல்லாம், ஐயப்பன் மகி மைகளைச் சொல்லுவார். தவிர, என் அப்பா, சிறு வயதிலிருந்தே, "எல்லா மதமும் ஒன்றுதான்; மதங்களுக்குள்ளே உயர்வு, தாழ்வு இல்லை; நீ எல்லாக் கடவு ளையும் வணங்க வேண்டும்," என்பார். ரோட்டில் போகும்போது, வழியில் பிள்ளை யார் கோவில் வந்தாலும், சர்ச் வந்தாலும் பிரார்த்தனை செய்யச் சொல்வார். பாடக் கற்றுக் கொண்டபின், வாழ்க்கையில் ஒரு நிலையான இடம் கிடைக்க நான் பட்ட கஷ்டங்கள் சொல்லி மாளாது. சாப்பாட் டுக்குத் திண்டாடிய நாட்கள் பல. அந்தச் சமயத்தில் என் பக்தி மனத்தளவில் மட் டுமே இருந்தது. வாழ்க்கையில் ஒரு நிலை யான இடத்தை அடைந்தபின், அதற்கு நன்றி கூறும் வகையில் சபரிமலைக்குப் போக விரும்பினேன். சபரிமலை ஆலய நிர்வாகத் தினருக்கு என் விருப்பத்தைத் தெரிவித்துக் கடிதம் எழுதினேன். 'விரதமிருந்து, இருமுடி கட்டி வரும் எவரானாலும், பதினெட்டுப் படியேறிட அனுமதி உண்டு. விரதமின்றி, படியேற முடியாது' என்று தெரிவித்தார்கள். நானும் விரதமிருந்து, மலைக்குப் போனேன். நான் புகழடைந்த நிலையிலும், எந்தவித மான சலுகையும் பெறாமல், விரதமிருந்து, வரிசையில் நின்று ஆண்டவனைத் தரிசிப்ப தையே மனப்பூர்வமாய் விரும்புகிறேன். நான் தொடர்ந்து மலைக்குச் செல்லுவேன்.

கே: உங்கள் குடும்பம் இசைக் குடும்பமா?

ப: என் அப்பா, தேங்காய் நாரிலிருந்து பொருட்கள் தயாரிக்கும் நிறுவனத்தில் சாதாரண வேலை பார்த்தவர். அவருக்கு இசையில் ஈடுபாடு உண்டு. என் தாத்தாவும் நன்றாய்ப் பாடுவாராம். நான் நன்றாகக் கர்நாடக இசை கற்றுக் கொண்டு பாடகராக வேண்டும் என்பது என் அப்பாவின் ஆசை; நன்றாய்ப் படித்தால் போதும் என்பது அம்மா வின் விருப்பம். அம்மாவின் விருப்பம் நிறை வேறவில்லை. ஆமாம்! எஸ். எஸ். எல். சி. யில் ஃபெயில்! (சிரிப்பு)

கே: கர்நாடக இசை கற்றுக் கொள்ள எந்த வயது ஏற்றது?

ப: வேறு எந்தப் பிரச்னையும் இல்லாத இளம் வயதுதான். இப்போது ஒரு பாட்டை மனப்பாடம் செய்வது கஷ்டமாய் இருக் கிறது. ஆனால் சிறு வயதில் வெகு சுலபமாய் மனப்பாடம் ஆயிற்று. அப்போது கற்றுக் கொண்டவை இன்னமும் ஞாபகம் இருக் கின்றன.

கே: புதுப்புது ராகங்களை உருவாக்குவது என்பது சாத்தியமா?

ப: 'புது ராகம்' என்று சொல்வதிலெல் லாம் எனக்கு உடன்பாடில்லை; புதிதாய் ராகங்களை உருவாக்கவே முடியாது என்பது என் கருத்து.

கே: நல்ல கர்நாடக இசைக் கலைஞரான நீங்கள், சிந்து பைரவியில் 'தண்ணி தொட்டி' போன்ற பாட்டுகளைப் பாடலாமா?.

ப: அதே படத்தில் பாடிய கீர்த்தனை களை மறந்து விட்டீர்களே! அதுவுமின்றி, அந்த வித்வான் கேரக்டரின் அமைப்புப்படி, அந்தப் பாட்டு அவசியம். எனவேதான் பாடி னேன். மேலும், சினிமா எனக்குப் பெயரும், புகழும் பெற்றுத் தந்துள்ளது. அதனால் சில 'காம்ப்ரமைஸ்கள்' செய்து கொள்ளத்தான் வேண்டும்.

கே: 'பிள்ளை' நிலா... என்பதை 'பில்லை' நிலா என்று உச்சரித்துப் பாடியிருக்கிறீர் களே!

ப: நான் அடிப்படையில் மலையாளியா யிற்றே! நான் எத்தனை முயன்றும் 'பிள்ளை'

என்று உச்சரிக்க வரவில்லையே, நான் என்ன செய்ய? ('நில்லை' என்றே கூற ஒரே சிரிப்பு)

கே: குறிப்பிட்ட சில கீர்த்தனைகளையே உங்கள் எல்லாக் கச்சேரிகளிலும் பாடு கிறீர்களே, இது ஏன்?

ப: உண்மையைச் சொல்லட்டுமா? எனக்கு நிறைய கிருதிகள் தெரியாது. கச்சேரிக்கு வருகின்ற பெரும்பாலான ரசிகர்களின் நிலை மையும் அதுதான்.

கே: பாடகராகியிருக்கா விட்டால், என்ன வாகியிருப்பீர்கள்?

ப: முதலில் பாடகராக வேண்டும் என் பதுதான் ஒரே லட்சியமாக இருந்தது. பாடக ரான பின்போ வேறு சிந்தனையே இல்லை!

கே: உங்களுக்குப் பிடித்த பாடகர் யார்?

ப: சிறு வயதில் என்னை மிகவும் கவர்ந் தவர் பாலமுரளி கிருஷ்ணா. இப்போது எல்லா பாடகர்களுமே!

கே: உங்களுக்கு ரொம்பப் பிடித்த ராகங் கள்?

ப: கல்யாணி, ஹிந்தோளம்.

கே: நீங்கள் ஏன் படங்களுக்கு இசை யமைப்பதில்லை?

ப: மூன்று மலையாளப் படங்களுக்கு இசையமைப்பாளராய்ப் பணிபுரிந்தேன். முதல் இரண்டும் தோல்வி. மூன்றாவது படத்தில், மற்ற பாடல்கள் ஹிட் ஆகாமல், ஒரு இந்திப் பாட்டின் டியூனை அப்படியே உபயோகித்துப் போட்ட பாட்டு (டப்பாங் குத்து ஸ்டைல்) ஹிட்டானது. இது எனக்கு மிகுந்த வருத்தமளித்தது. இசையமைப்பை இனி ஏற்பதில்லை என முடிவு செய்தேன்.

கே: சாஸ்திரீய சங்கீதம் பாடுவதற்கும், சினிமாப் பாட்டுப் பாடுவதற்கும் என்ன வித்தியாசத்தை உணர்கிறீர்கள்?

ப: நூற்றைம்பது கிலோ எடை தூக்குட வன், ஐம்பது கிலோ எடை தூக்குவது போல உணர்கிறேன்.



“சினிமா எனக்குப் பெயரும் புகழும் பெற்றுத் தந்துள்ளது. அதனால் சில 'காம்ப்ரமைஸ்' கள் செய்து கொள்ளத்தான் வேண்டும்.”

தொகுப்பு: எஸ். சந்திரமௌலி.

வண்ணப்படம்: சுபா ரவிசங்கர்.

# சலீம்பாயின் சாதனை!

• ஸ்ரீதேவியை ஆட்டி வைக்கிறார் சலீம்.

விஜயா கார்டனில் 'என் ரத்தத்தின் ரத்தமே' படப்பிடிப்பில் நடிகை மீனாட்சி சேஷாத்திரிக்கு டான்ஸ் மூவ்மெண்ட் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தார் டான்ஸ் மாஸ்டர் பி. ஏ. சலீம்.

தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம், இந்தி, ஒரியா போன்ற மொழிகளில் நானூறு படங்களுக்கு மேல் டான்ஸ் மாஸ்டராகப் பணிபுரிந்த அனுபவஸ்தர் சலீம். பன்னிரண்டாண்டு இடைவெளிக்குப் பின் தமிழில் இப்படத்தில் பணிபுரிகிறார்.

"உங்களுடைய 'ரேட்' ரொம்ப அதிகம்; அதனால்தான் தமிழ்ப்படாதிபதிகள் ஒதுங்குகிறார்கள்; உங்களை ஒதுக்குகிறார்கள் என்று கூறப்படுகிறதே" என்று சலீமிடம் கேட்டேன்.

சலீம்பாய் கோபப்படாமல் அமைதியாகப் பதில் சொன்னார்:

"நான் படத் தயாரிப்பாளர்களிடம் ஒரு சவாலாகக் கேட்கிறேன். டைமிங் சென்ஸுடன் பணிபுரிந்தால் கணிசமான பிலிமைச் சேமிக்க முடியும். முன்பு ஆயிரம் ரூபாய் விற்ற பிலிம் இப்போது ஐயாயிரம் ரூபாய்க்கு விற்கிறது. சிக்கனம் என்ற நினைப்பில் என்னைப் போன்ற அனுபவ டான்ஸ் மாஸ்டரைக் கூப்பிடாமல் மற்றவர்களை வைத்து நடனக் காட்சியை எடுக்க எட்டு, ஒன்பது ரீல் பிலிமை வேஸ்ட் செய்வது சரியா? பிலிம் விலையே ஐம்பதாயிரம் ஆகிவிடுகிறதே! அதில் தேறுவது எவ்வளவு?

"சமீபத்தில் ஓர் ஒரிய மொழிப் படத்தில் பணிபுரிந்தேன். ஒரே நாளில் ஒரு பாட்டை 1400 அடி பிலிமில் எடுத்துத் தந்தேன். அங்கே பல தயாரிப்பாளர்கள், பல டான்ஸ் மாஸ்டர்கள் ஒரு பாடலை எடுக்கப் பத்து நாட்கள் நேரமெடுப்பதையும் பணத்தை விரயம் செய்வதையும் என்னிடம் கூறி வருந்தினார்கள். என்ன செய்வது?

"ஒரு தயாரிப்பாளர் நன்றாக இருந்தால்தான் அவர் மூலம் நூறு டெக்னீஷியன்கள் நன்றாக இருப்பார்கள். இந்த எண்ணம் ஒவ்வொரு டெக்னீஷியனுக்கும் வரவேண்டும். ஒரு தயாரிப்பாளர் இல்லையானால் அந்த அளவுக்கு டெக்னீஷியன்களுக்கும் வாய்ப்புக் குறைவதை உணர வேண்டும். அதனால் நல்ல ஒத்துழைப்புத் தரவேண்டும்.

"சமீபத்தில் சுந்தர்லால் நஹாதா தயாரித்த 'மஜால்' என்ற இந்திப் படத்தின் ஐந்து பாடல்காட்சிகளை ஆறே நாட்களில் மளமளவென்று எடுத்து முடித்தேன். ஜிதேந்திரா, ஸ்ரீதேவி, ஜெயப்பிரதா நடித்த அந்தப் பாடல் காட்சிகளைக் குறிப்பிட்ட நாட்களுக்குள் எடுக்காவிட்டால் ஸ்ரீதேவியின் கால்ஷீட் ஒரு வருடத்துக்கு இல்லை. தயாரிப்பாளருக்கு எத்தனை நஷ்டம் ஏற்படும்! ஒரு பாடலை ஆறு நாட்கள் எடுப்பது சகஜம். ஐந்து பாடல்களை ஆறு நாட்களில் எடுத்து அதிலும் விதம் விதமான உடைகள் மாறுதலுடன் எடுத்தது சாதனையே. பாடல் காட்சிகளை எப்படி எடுக்க வேண்டும் என்று இருபத்து நான்கு மணி நேரமும் சிந்தித்துச் செயல்பட்டால் நேரமும் அதனால் செலவும் கணிசமாக மிச்சப்படும்.

"இப்படிச் செலவை மிச்சப்படுத்திக் காட்டும் ஆற்றல் மிக்க டெக்னீஷியனுக்குத் தயாரிப்பாளர் கொஞ்சம் கூடக் கொடுத்தால்தான் என்ன? மொத்தத்தில் அவர்களுக்கு லாபம்தானே?" என்று ஒரு போடு போட்டார் சலீம்.

— மன்னை சௌரிராஜன்

# காதலென்பது...

ஆபீஸ் விட்டுக் கீழிறங்கி, கடைசிப் படியில் கால் வைக்கும் போது தான் நரேந்தரனைப் பார்க்க வேண்டும் என்று ஞாபகம் வந்தது. அவனிடம் ஏதாவது புத்தகம் வாங்கி வாசிக்க வேண்டும்.

ஆபீஸ் சேர்ந்ததிலிருந்து புத்தகங்கள் அந்நியமாகி விடுகிற அளவுக்கு வேலை. இந்த சனி, ஞாயிறாவது வாசிக்க வேண்டும். புத்தகம் வாசிப்பது விச்ராந்தியாய்ப் படுத்தபடி வானத்தை ரசிக்கிற சுகம்.

நரேந்தரனின் ஸ்நேகிதமும் இந்த சுகம்தான். இந்த நட்பு கூட லைப்ரரியில் ஏற்பட்ட சிநேகிதப் பரிமாற்றம்தான். இரு வீட்டாரும் ஒப்புக் கொண்ட நட்பு. 'நரேன் நல்ல பையன்' என்றும், 'இந்து நல்ல பெண்' என்றும் ஒப்புக் கொண்டது சுற்றம்.

மழை பெய்கிற மாதிரி வானம் தூறியது. இந்து புடவைத் தலைப்பால் தலையை மறைத்துக் கொண்டு அவசரமாய் நடந்தாள். நரேந்தரன் வீட்டு வாசலில் அவன் அம்மா நடையில் உட்கார்ந்து பூ கட்டிக் கொண்டிருந்தாள்.

''வாம்மா இந்து.''

''நரேன் இருக்காராம்மா?''

''மாடில இருந்தான். போயேன்.''

மொட்டை மாடியில் நரேந்தரன் சாரலில் நின்று ஷர்ட் நனைவதைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

''ஹலோ நரேன்.''

''ஆஹ்... அட... நீயா?''

''புக் தர்றேன்னு சொன்னீங்களே?''

நரேந்தரன் பளிச்சென்று சிரித்தான். கண்பார்வை மாதிரி மனசை ஊடுருவுகிற சிரிப்பு. சிரிப்புக்குக் கண் முளைக்கிற மாதிரி சிரிப்பான். அவனால் மட்டுமே சிரிக்க முடிகிற சிரிப்பு.

''அவசரமா போகணுமா இந்து?''

''ஏன்.... என்ன விஷயம்?''

''ஒண்ணுமில்லை. சும்மா பேசத்தான். இந்த மாதிரி சாரலுக்கு,ஏத்த மனசுத் துணையோட பேசிட்டிருக்கிறது ஸ்வர்க்கம் இந்து.''

''புக்...?''

''கீழே வச்சிருக்கேன். கொஞ்ச நேரம் இரேன். வீட்ல சொல்லிட்டு வந்திருக்கே இல்லே?''

''ம். என்ன ஸ்பெஷல் நியூஸ்?''

மொட்டை மாடி சுவரில் ஏறி இந்து உட்கார்ந்து கொண்டாள். நிஜமாகவே இந்த சாரலில் நரேந்தரனுடன் பேசிக் கொண்டிருப்பது ஸ்வர்க்கமாகத்தான் இருக்கிறது.

''இன்னிக்கு ஒரு விஷயம் இந்து.''

''என்ன?''

''எங்க எதிர் வீட்டுப் பொண்ணும் பக்கத்து வீட்டுப் பையனும் 'லவ்' பண்ணித் தகராறு ஆச்சே. இன்னிக்கு அந்தப் பொண்ணுக்கு வேறொருத்தனோட கல்யாணம். ச்சே!''

நிமிஷத்தில் இந்து முகம் மாறினாள். எதற்காக இதைப் பேசுகிறான்? வேறு விஷயம் இல்லையா?

''யார் யாரை 'லவ்' பண்ணா என்ன? வேற விஷயம் பேசுங்க நரேன்.''

''ஏன் — காதல்னா அசிங்கமா?''

''அசிங்கம்னு சொல்லலை நரேன்.''

''என்ன, ஏன் முகம் சுளிக்கறே? அதுல என்ன தப்பு?'' — நரேந்தரன் கண்ணில் அக்னிக் குஞ்சு தெரிந்தது.

''காதல் உசந்ததுதான். ஆனா... அதெல்லாம் நம்ம நாட்டுக்கு ஒத்துவர்றதில்லை. காதலிக்கிற தொண்ணுத்தொம்போது பர்செண்டுக்குக் கல்யாணம் பண்ணிக்கத் தைரியம் கிடையாது. ஏன் — உங்க எதிர் வீட்டுப் பொண்ணு தைரியமா உறவையெல்லாம் தகர்த்தெறிஞ்சிட்டுக் காதலிச்சவனையே கல்யாணம் பண்ணியிருக்கலாமே. மாட்டா. காரணம் — காதல்ங்கிறது ஒரு பொழுது போக்காயிட்டுது. அதான் அது அசிங்கமா பேசப்படுது. ஊரோட ஒத்துப் போறது நல்லது நரேன். காதல் அசிங்கம்னு சொல்றது தப்பில்லை. லிவ் வித் த வொர்ல்ட்.''

நரேந்தரன் பதில் பேசாமல் கீழே இறங்கிப் போய், புத்தகம் எடுத்து வந்தான்.

''இந்து...''

''ம்?''

''காதல் உன்னைப் பொறுத்தவரை அசிங்கமா இருக்கலாம். நீ ஊரோட ஒத்துப் போகலாம். ஆனா... என்னால முடியாது. எனக்குக்காதல் அசிங்கமில்லை. தப்பில்லை. அழகானது.''

''இப்ப ஏன் இதை இவ்ளோ சீரியஸா பேசணும்?''

நரேந்தரன் புத்தகத்தைத் திறந்து ஒரு பேப்பரை எடுத்து நீட்டினான்.

''என்னது நரேன் இது?''

''வாசி இந்து...''

ஜெயந்தி



இந்து கேள்விக்குறி கண்ணில் படரத் தாளைப் பிரித்தாள்.

இந்து,

காலையில் வெயில் வருவதும்; சாயங்காலம் நிலா வருவதும் எவ்வளவு யதார்த்தமோ அவ்வளவு யதார்த்தம் நட்பு, காதல் ஆவது. இது ஒரு அழகான மாற்றம். இந்த மாற்றம் என் மனத்தில் நிகழ்ந்து விட்டது இந்து.

உனக்கு இதில் விருப்பமில்லையென்றால் சொல்லி விடு. மனத்தில் முளைத்த சிறகை வெட்டி விடுவது கஷ்டம்தான். வலிக்கும்தான். ஆனால் சிறகில்லாமல் தான் வாழ வேண்டும் என்றால் அப்படி வாழ்வதில் தப்பில்லையே!

உன் சிநேகிதன்,
நரேந்தரன்.

இந்துவுக்கு முகம் சிவந்தது. மேல் உதடு துடித்தது. மழை சாரலை மீறிக் கொண்டு நெற்றியில் வியர்வைத் துளிகள் முளைத்தன. நரேந்தரன் அசையாமல் நின்று வானத்தை அண்ணாந்து மூக்கைச் சுருக்கிக் கொண்டு பார்த்துக் கொண்டிருந்தான்.

"நரேன்... இதெல்லாம் என்ன பைத்தியக்காரத்தனம்? நம்ம நட்பை அசிங்கமாக்காதீங்க."

"காய், பழமாகிற மாதிரி இதுவும் ஒரு இயல்பு இந்து. வாழ்க்கையெல்லாம் உன்னோட இருக்க ஆசைப்படுகிறேன். தப்பா?"

"நரேன்... இது..."

"இதோ பாரு இந்து... நிதானமா வீட்டுக்குப் போய் யோசி... தனியா உட்கார்ந்து இந்த லெட்டரை இன்னொரு தடவை வாசிச்சிட்டு பதில் சொல்லு. வேண்டான்னு பதில் சொன்னாலும் சரி. ஆனா ஒண்ணு இந்து... காதலிங்கிறது இரண்டு மனசு மட்டுமே சம்பந்தப்பட்டது. ஞாபகம் வச்சுக்க."

மறுபடியும் புத்தகத்துக்குள் கடிதத்தை வைத்து நீட்டினான். இந்து ஒரு நிமிஷம் தீர்க்கமாய் அவனைப் பார்த்தாள். சட்டென்று கோபமாய்ப் புத்தகத்தை வாங்கிக் கொண்டு மாடிப்படி இறங்கிய போது மனசிற்குள் ஒரு எரிமலை ஜனித்தது. இயல்பான நிகழ்வாம். காதலாம். மண்ணாங்கட்டியாம்.

பெரிசாய்ச் சிரிக்க வேண்டும் போலிருந்தது. கீழே நரேந்தரனின் அம்மா இந்துவைப் பார்த்து நேசமாய்ச் சிரித்தாள்.

"உட்காரும்மா இந்து... பூ வச்சிட்டுப் போ."

அவள் பூ வைத்து விடும் போது காரணமில்லாமல் அழுகை வந்தது. எதற்காக அழுகிறேன்? இவள் பூ



வைக்கிற செயல் அழ வைக்கிறதா? ஆனால்... எதற்காக? ஒரு நல்ல நண்பன் தண்டவாளம் மாறிப் போய் விட்ட ரணத்தினாலா?

வீட்டுக்குள் நுழைகிற வரை மழை தூறலுக்குச் சம்பந்தமே இல்லாமல் மனசு எரிந்தது. முகம் கழுவி விட்டு அப்படியே ஈர முகத்தோடு படுத்துக் கிடக்க வேண்டும் போலிருந்தது.

எதற்காக இவ்வளவு தூரம் பாதிக்கப்படுகிறேன்? யோசிக்க வேண்டும். யோசனை மட்டும் மன நிவாரணி. நரேந்தரன் காதலிக்கிறான் – இதுதான் மூல விஷயம். அவன் காதலிக்கட்டும். அது அவன் மனம். காதலிக்க அவனுக்கு உரிமை உண்டு. எனக்குப் பிடிக்கவில்லை என்றால் 'இல்லை' என்று சொல்லி விட்டுப் போகிறேன்.

நரேந்தரன் புரிந்து கொள்வான். அவன் விருப்பங்களே என் விருப்பமாகவும் இருக்க வேண்டும் என்பது சரியல்ல என்பது நரேந்தரனுக்குத் தெரியும். அவனால் இந்த நெகடிவ் பதிலை ஏற்றுக் கொள்ள முடியும். நிஜங்களை ஏற்பதும் ஒத்துக் கொள்வதும் ஒரு கலை. அது நரேந்தரனுக்கு நிறைய உண்டு.

முகம் கழுவி, துணி மாற்றி விட்டு வந்த போது முன்னறையில் அசாத்திய மௌனம் நிலவியது. அப்பா கூர்மையாகப் பார்த்தார். அம்மா துணி மடிக்கிற சாக்கில் இரண்டு நிமிஷத்துக்கொரு தடவை முகத்தைப் பார்த்து விட்டுக் குனிந்து கொண்டான். இந்துவுக்கு ஒரு வருஷம் கழித்துப் பிறந்த கல்யாணி பாடப் புத்தகத்தைத் தலைகீழாய் வைத்துப் படித்துக் கொண்டிருந்தாள்.

“ஏய் கல்யாணி... தூங்குறியா? தலைகீழாப் புக் படிக்கிறே?”

அப்பா சட்டென்று கண் கருவிழி தெறிக்க நிமிர்ந்து பார்த்தார்.

“எல்லாமே தலைகீழா தானே நடக்குது. அவ தலைகீழா படிக்கிறதுலே என்ன தப்பு கண்டுட்டே?”

“என்னப்பா சொல்றீங்க?”

அம்மா மடித்துக் கொண்டிருந்த துணியைக் கீழே போட்டு விட்டு நரேந்தரன் தந்த புத்தகத்தை மேஜையிலிருந்து எடுத்து, கோபமாய் வீசினாள். படாரென்று பக்கம் விரிந்து, அந்தக் கடிதம் கீழே தத்தளித்து விழுந்தது.

இந்து நிமிஷத்தில் நிலைதடுமாறிப் பார்த்தாள். முகம் கழுவும் நேரம் என்ன நடந்திருக்கும் என்று புரிந்தது.

“புதுசா உன் பையில ஏதோ புக் இருக்கேன்னு புரட்டினா... உள்ள லவ் லெட்டரா வச்சிருக்கே... லவ் லெட்டர்? எத்தனை நாளா நடக்குது இந்தக் கூத்து? உங்களை முழுசா நம்பிப் பழக விட்டோமே... அதுக்கு நல்ல பதிலடி கொடுத்துட்டேடி.”

“அப்பா... நான் சொல்றதை...”

“என்னத்தை சொல்லப் போறே. நீ ஒண்ணும் தெரியாத பாப்பா பாரு. அதான்

ஊர்ல உள்ளவன் எல்லாம் லெட்டர் எழுதுறான். என்னடி நினைச்சிட்டிருக்கே? சம்பாதிக்கிற திமிர். வேறென்ன? நீ இல்லாட்டா எங்களுக்குச் சோறு கிடையாது பாரு. பச்சைத் தண்ணி குடிச்சே செத்துப் போயிடுற நிலை பாரு... குடும்ப கௌரவத்தை நாசம் பண்ண வந்த பாவி.''

அப்பா கத்தினார். ஒவ்வொரு கத்தலுக்கும் இந்து துவண்டாள். நரேந்தரன்... உங்களால் தான் இந்தப் பழி? ஏன் எழுதினீர்கள் இப்படி ஒரு கடிதம். முன்பிருந்த மாதிரியே ஒரு நல்ல சிநேகிதனாய் நீங்கள் இருந்திருக்கலாமே. உங்கள் கல்யாணத்துக்கு நான் வரவும், என் கல்யாணத்துக்கு நீங்கள் வரவும்... சுகமாய், சந்தோஷமாய் இருந்திருக்கலாமே.

யதார்த்தம் என்று நீங்கள் சொன்னதன் யதார்த்த எதிரொலி இது. நீங்கள் சொன்ன இயல்பின் முடிவு இது. காதல் இரண்டு மனம் சம்பந்தப்பட்டது என்றீர்களே — இல்லை நரேன். சத்தியமாய் இல்லை. நம் நாட்டில் காதல் சுற்றம் சம்பந்தப்பட்டது. அதால் திணிக்கப்பட்டது. 'இவன் உன் கணவன். இவனைக் காதலி' என்று கட்டாயப்படுத்தப்படுகிற காதல் இங்கே. இதை மீறுவது லேசில்லை. சமூகக் கோட்பாடுகளில் வேலியைத் தாண்டுவது சுலபமில்லை. நகத்திற்குள் நுழைந்து விட்ட சிராய் மாதிரி இம்சைப்படுத்துகிற விஷயம்.

''அழு. அழுது என்ன புண்ணியம்? குடும்ப மானம் உன்னால கப்பலேறிட்டுது. சந்தோஷமா? பொம்பளைப் பிள்ளையை வேலைக்கு அனுப்ப வேணாம். நிறுத்திடும்னு சொன்னேனே... கேட்டீங்களா? இப்ப எல்லாத்துக்கும் சேர்த்துவச்சுப் படுங்க. உங்களுக்கு இதுவும் வேணும். இன்னமும் வேணும்.''

''யாருக்குத் தெரியும் சொர்ணம் இவ இப்படி காலை வாருவான்னு? நம்பித் தானே அவன் கிட்ட புஸ்தகம் மாத்திக்க விட்டேன். அவன் வீட்டுக்குப் போறப்போ நம்புனேன். எல்லாத்தையும் நம்புனேன். அங்க என்ன நடந்துச்சோ....''

மகளைப் பார்த்துத் தகப்பன் பேசுகிற வார்த்தை.... கடவுளே! நரேன்... இவர்கள் பேசுவதெல்லாம் உங்களுக்குக் கேட்கிறதா? வந்து சொல்லக் கூடாதா — இவள் — இந்தப் பெண் என் ஸ்நேகிதி என்று. காதலைப் பற்றி என்னிடம் வாய் கிழியப் பேசினீர்களே. இவர்களிடம் வந்து சொல்லுங்கள். என் மீது தப்பில்லை என்று சொல்லுங்கள். காதல் அசிங்கமில்லை என்று சொல்லுங்கள்.

அப்பா ராத்திரி இந்துவுக்குச் சாப்பாடு கிடையாது என்றார். தண்டனை! குற்றம் செய்யாமல் கிடைக்கும் தண்டனை.

பெரிசாய்ச் சிரிப்பு வந்தது. கண்ணீரோடு சேர்த்து விழுங்கிக் கொண்டாள். அறை மூலையில் நரேந்தரனின் கடிதம் படபடத்துக் கொண்டிருந்தது.

''காலையில் வெயில் வருவதும் சாயங்காலம் நிலா வருவதும் எவ்வளவு யதார்த்தமோ அவ்வளவு யதார்த்தம், நட்பு காதல் ஆவது.''

இந்து அவசரமாய் அந்தத் தாளை மடக்கி நரேன் எழுதினதுக்குப் பின் பக்கம் அழுத்தமாய், நிதானமாய் எழுதினாள்:

நரேன்,

யோசித்தேன். காதல் என்பது இயல்பாக வருவது...

... என்னை அறியாமல் என் மனத்திலும் அது மலர்ந்துள்ளது. இன்றைக்கு என் அப்பாவும் அம்மாவும் எனக்கு அதை உணர்த்தினார்கள்.

ஆமாம் — நான் உங்களைக் காதலிக்கிறேன்.

இனி நாம் சேர்ந்து எதிர்ப்புகளைச் சந்திப்போம்.

— இந்து.

"நேற்று எங்க காலேஜுக்கு வந்த என் கப்பா ரொம்ப ஆச்சர்யப்பட்டு போயிட்டார்!''

"எதை பார்த்துட்டு?''

''காலேஜில் என்னைப் பார்த்துட்டுத் தான்......''

— மணியன் தர்மலிங்கம்.



''என்ன டாக்டர், நர்ஸ், சொம்பில் 'ஜலத்தோட,' என் பக்கத்தில் நிக்கறாங்க...?''

''அதுவா? இப்போ, நான் 'பீஸைப்' பத்திச் சொல்லப் போறேன். உங்களுக்கு 'மயக்கம்' வந்துடும். தண்ணி தெளிக்க, உங்களை எழுப்பத்தான்...''

— ஆர். வசந்தகுமார்.



இலவச இணைப்புக்கள்

அமரர் **கல்கி** எழுதிய
அற்புதமான ஆறு குறுநாவல்கள்.

1. ஒற்றை ரோஜா
2. அமர வாழ்வு
3. பொங்குமாங்கடல்
4. காதறாக் கள்ளன்
5. மாடத்தேவன் சுனை
6. ஜமீன்தார் மகன்

ஆகஸ்டு 7-ம் ஆண்டு மலரிலிருந்து
**கல்கி** வழங்குகிறது.

# மேற்கு வங்கச் சிறப்பிதழ்





# சூரியா-கிரண்

**மர்ம சித்திரத்தொடர்**

ரூ.1500/- முதல் பரிசு

# சிறுகதை




## அத்தியாயம் 26

## அநிருத்தரின் பிரார்த்தனை

முதன் மந்திரி அநிருத்தப் பிரம்மராயர் வீற்றிருந்த பல்லக்கு நிலா முற்றத்தில் கூடியிருந்த ஜனக் கூட்டத்தைப் பிளந்து வழி ஏற்படுத்திக் கொண்டு வந்தது. இரு பக்கமும் விலகி நின்ற மக்கள் முதன் மந்திரியிடம் தங்களுடைய மரியாதையைத் தெரிவித்துக் கொண்டார்கள். பலர் இளவரசரைப் பற்றிய தங்கள் கவலையையும் வெளியிட்டார்கள். முதன் மந்திரியும் கவலை தங்கிய முகத்துடனேதான் தோன்றினார். ஆனாலும் இரு கைகளையும் தூக்கி ஜனங்களுக்கு ஆறுதலும் ஆசியும் கூறும் பாவனையில் சமிக்ஞை செய்து கொண்டு சென்றார். அரண்மனைக் கட்டடத்தின் முகப்பை அடைந்ததும் பல்லக்கு கீழே இறக்கப்பட்டது. முதன் மந்திரி வெளி வந்து முதலில் மேலே நோக்கினார். பெரிய ராணியும் இளவரசியும் அங்கே நிற்பதைப் பார்த்து வணக்கம் செலுத்தினார். பிறகு, துவந்த யுத்தம் நடந்த இடத்தை நோக்கினார். இவ்வளவு நேரமும் தங்களைச் சுற்றி நடப்பது ஒன்றையும் தெரிந்து கொள்ளாமல் வந்தியத்தேவனும் பினாகபாணியும் சண்டை போட்டுக் கொண்டிருந்தார்கள். ஆழ்வார்க்கடியான் இதற்குள் இறங்கி வந்து முதன் மந்திரியின் காதருகில் ஏதோ சொன்னான். அவர் தம் முன் வந்த சேவகர்களைப் பார்த்து, "அரண்மனை முற்றத்தில் கலகம் செய்யும் இந்த முரடர்களை உடனே சிறைப்படுத்துங்கள்!" என்று கட்டளையிட்டார். சேவகர்களுடன் ஆழ்வார்க்கடியானும் கூட்டத்தைப் பிளந்து கொண்டு சென்றான். சண்டை போட்ட இருவரையும் சேவகர்கள் கைப்பற்றி அவர்களுடைய கைகளை வாரினால் பிணைத்தார்கள். ஆழ்வார்க்கடியான் வந்தியத்தேவனை நோக்கி ஜாடை செய்யவே அவன் தன்னைச் சிறைப்படுத்தும் போது சும்மாயிருந்தான்.

அநிருத்தர் மேல் மாடத்துக்குச் சென்றார். அங்கு நின்றபடி ஜனங்களைப் பார்த்து "உங்களுடைய கவலையையும் கோபத்தையும் நான் அறிவேன். சக்கரவர்த்தியும் ராணிமார்களும் உங்களைப் போலவே துயரத்தில் ஆழ்ந்திருக்கிறார்கள். அவர்களுடைய கவலையை அதிகப்படுத்தும்படியான காரியம் எதுவும் நீங்கள் செய்ய வேண்டாம். இளவரசரைத் தேடுவதற்கு வேண்டிய ஏற்பாடு செய்திருக்கிறது. நீங்கள் எல்லாரும் அமைதியாக வீடு திரும்புங்கள்!" என்று கூறினார்.




"சக்கரவர்த்தியை நாங்கள் பார்க்க வேண்டும். சக்கரவர்த்தி பழையாறைக்குத் திரும்பி வர வேண்டும்" என்று கூட்டத்தில் ஒருவர் கூவினார்.

"இலங்கையில் உள்ள எங்கள் ஊர் வீரர்கள் கதி என்ன?" என்று இன்னொருவர் கேட்டார்.

"சக்கரவர்த்தி தஞ்சை அரண்மனையில் பத்திரமாயிருக்கிறார். அவர் தங்கியுள்ள அரண்மனையை இப்போது வேளக்காரப் படையினர் இரவு பகல் காவல் புரிகின்றனர். கூடிய சீக்கிரத்தில் சக்கரவர்த்தியை இந்த நகருக்கு நானே அழைத்து வருகிறேன். இலங்கையில் உள்ள நம் வீரர்களைப் பற்றியும் உங்களுக்குக் கவலை வேண்டாம். ஈழத்துப் போர் நமக்குப் பூரண வெற்றியுடன் முடிந்து விட்டது. நம் வீரர்கள் விரைவில் திரும்பி வந்து சேருவார்கள்!" என்று முதன் மந்திரி அறிவித்ததும் கூட்டத்தில் பெரும் உற்சாக ஆரவாரம் ஏற்பட்டது. சுந்தர சோழரையும் அன்பில் அநிருத்தரையும் வாழ்த்திக் கொண்டு ஜனங்கள் திரும்பலானார்கள்.

**மு**தன் மந்திரி பெரிய மகாராணியைப் பார்த்து, "தேவி! தங்களிடம் மிக முக்கியமான விஷயங்களைப் பற்றிப் பேச வேண்டும்! அரண்மனைக்குள் போகலாமா?" என்றார். இளவரசியைத் திரும்பிப் பார்த்து, "அம்மா! உன்னிடம் பிற்பாடு வருகிறேன்" என்று கூறியதும், குந்தவை தன்னுடைய இருப்பிடத்துக்குப் புறப்பட்டாள். அவளுடைய மனத்தில் இப்போது பல கவலைகள் குடிகொண்டன. சோழ சாம்ராஜ்யத்தில் யாராவது ஒருவரிடம் குந்தவை பயம் கொண்டிருந்தாள் என்றால், அவர் முதன் மந்திரி அநிருத்தர்தான். கழுகுப் பார்வையுள்ள மனிதர் அவர். புறக்கண்களினால் பார்ப்பதைத் தவிர, எதிரேயுள்ளவர்களின் நெஞ்சிலும் ஊடுருவிப் பார்த்து அவர்களுடைய அந்தரங்க எண்ணங்களை அறியும் ஆற்றல் படைத்தவர். அவருக்கு எவ்வளவு தெரியும், எவ்வளவு தெரியாது. அவரிடம் எதைச் சொல்லலாம். எதைச் சொல்லாமல் விடலாம் என்பதைப் பற்றி இளைய பிராட்டிக்கு ஒரே குழப்பமாயிருந்தது. வாணர்குல வீரனையும் பினாகபாணியையும் சேர்த்து அவர் சிறைப்படுத்தும்படி கட்டளையிட்டது இளவரசிக்கு ஆத்திரத்தை உண்டு பண்ணியது. அதை வெளிக்காட்டிக் கொள்ளவும் முடியவில்லை. அந்த மாபெரும் ஜனக் கூட்டத்தின் முன்னால் வந்தியத்தேவனுக்குப் பரிந்து பேசவும் முடியவில்லை. "என்னிடம் பிற்பாடு வரப் போகிறாராமே? வரட்டும்; ஒரு கை பார்த்து விடுகிறேன்!" என்று மனத்தில் கறுவிக் கொண்டே தன் அந்தப்

அமரர் கல்கி

புரத்தை நோக்கி விரைந்து சென்றாள்.

செம்பியன்மாதேவி சோழ சாம்ராஜ்யத்தில் அனைவருடைய பயபக்தி 'மரியாதைக்கும் உரியவராயிருந்தவர். முதன் மந்திரி அநிருத்தப் பிரம்மராயரும் அதற்கு விலக்கானவர் அல்ல. ஆனாலும் அம்மூதாட்டி இச்சமயம் ஏதோ ஒரு வித பயத்துடனேயே நடந்து கொண்டார். அநிருத்தர் ஆசனத்தில் அமர்ந்த பிறகே தாம் அமர்ந்தார்.

"ஐயா! சில காலமாக என் தலையில் இடிமேல் இடியாக விழுந்து கொண்டிருக்கிறது. நீரும் அத்தகைய செய்தி ஏதேனும் கொண்டு வந்தீரா? அல்லது ஆறுதலான வார்த்தை சொல்லப் போகிறீரா!" என்று வினவினார்.

"அம்மணி! மன்னியுங்கள்! தங்கள் கேள்விக்கு என்னால் விடை சொல்ல முடியவில்லை. நான் கொண்டு வந்திருக்கும் செய்தியைத் தாங்கள் ஏற்றுக் கொள்ளும் விதத்தைப் பொறுத்திருக்கிறது!" என்றார் தந்திரத்தில் தேர்ந்த முதன் மந்திரி.

"பொன்னியின் செல்வனைப் பற்றிய செய்தி உண்மைதானா, ஐயா! என்னால் நம்பவே முடியவில்லையே? அருள்மொழி வர்மனைப் பற்றி நாம் என்னவெல்லாம் நம்பிக்கொண்டிருந்தோம்? இந்த உலகத்தையே ஒரு குடை நிழலில் ஆளப் பிறந்தவன் என்று நாம் எத்தனை தடவை பேசியிருக்கிறோம்?......"

"பெருமாட்டி! ஜோசியர்கள் அவ்விதம் சொல்வதாகத் தாங்கள் என்னிடம் கூறியது உண்மைதான். அடியேன் தங்களை மறுத்தும் பேசியதில்லை; ஒத்துக் கொண்டும் பேசியதில்லை!"

"அதுபோகட்டும்; இப்போது சொல்லுங்கள். பொன்னியின் செல்வனைச் சமுத்திரராஜன் கொள்ளை கொண்டு விட்டது நிச்சயந்தானா?"

"நிச்சயம் என்று யார் சொல்ல முடியும் தாயே! அம்மாதிரி செய்தி நாடு நகரமெங்கும் பரவியிருப்பது நிச்சயம்."

"அது உண்மையென்று ஏற்பட்டால், இந்தச் சோழ நாட்டின் கதி என்ன? எத்தகைய விபரீதங்கள் ஏற்படும்?"

"விபரீதங்கள் அது உண்மையென்று ஏற்படும் வரையில் காத்திருக்கப் போவதில்லையென்று தோன்றுகிறது......"

"ஆம், ஆம்! விபரீதம் நேரிடுவதற்கு வதந்தியே போதுமானதுதான். இந்தப் பழையாறை நகர மக்கள் இவ்வளவு ஆத்திரங் கொண்டு திரளாக அரண்மனைக்குள் பிரவேசித்ததை இதுவரையில் நான் பார்த்ததில்லை......"

"பழையாறையில் மட்டுந்தான் இப்படி நடந்ததென்று கருத வேண்டாம். தஞ்சாவூர் நகரம் நேற்று முதல் அல்லோலகல்லோலமாயிருந்தது. வேளக்காரப் படையினர் சக்கரவர்த்தியின் அரண்மனையை விட்டு நகர மறுத்து விட்டார்கள். மக்கள் கோட்டைக்குள் திரள் திரளாகப் புகுந்து பழுவேட்டரையர்களின் மாளிகைகளைச் சூழ்ந்து கொண்டார்கள். மதங் கொண்ட யானைகளை ஜனங்களின் பேரில் ஏவிவிட்டு அவர்களைக் கலைந்து போகும்படி செய்ய வேண்டியதாயிற்று..."

"ஐயோ! இது என்ன விபரீதங்கள்! எத்தகைய பயங்கரமான செய்தி?"

"மதுராந்தகர் பழையாறைக்கு வந்துவிட்டதே நல்லதாய்ப் போயிற்று. இல்லாவிடில் அந்தப் பயங்கரமான பழி அவரையும் சேர்ந்திருக்கும்....."

"ஐயா! மதுராந்தகன் எப்படி மாறிப் போயிருக்கிறான் என்று தெரிந்தால் தாங்கள் ஆச்சரியப்பட்டுப் போவீர்கள்."

"ஆச்சரியப்பட மாட்டேன், தாயே! அவை எல்லாம் எனக்குச் சில காலமாகத் தெரிந்த விஷயந்தான்."

"தெரிந்திருந்தும் அவனுடைய மனத்தை மாற்றத் தாங்கள் ஒரு முயற்சியும் செய்யவில்லை! இப்போதாவது யோசனை சொல்லி உதவுங்கள்!"

"அம்மணி! மதுராந்தகருடைய மனத்தை மாற்ற வேண்டிய அவசியம் இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. அவருடைய கட்சியை ஆதரித்துப் பேசவே நான் வந்திருக்கி

றேன்......''

''அப்படியென்றால்? எனக்கு விளங்கவில்லை, ஐயா!''

''அம்மணி! மதுராந்தகர் இந்தச் சோழ சிங்காதனம் தமக்கு உரியது என்று கருதுகிறார். சக்கரவர்த்திக்குப் பிறகு தாம் இந்த இராஜ்யத்தை ஆள வேண்டுமென்று ஆசைப்படுகிறார். அது நியாயமான ஆசை. நன்றாக அவர் மனத்தில் வேரூன்றி விட்ட ஆசை. அதைத் தடுக்க முயல்வதினால் சோழ சாம்ராஜ்யத்துக்கு நன்மை ஏற்படாது. அதை நிறைவேற்றி வைப்பதுதான் உசிதம்...''

''ஐயோ! இது என்ன வார்த்தை? நீர் கூடவா சோழ சக்கரவர்த்திக்குத் துரோகம் செய்யத் துணிந்து விட்டீர்? இது என்ன விபரீத காலம்?''

''பெருமாட்டி! சக்கரவர்த்திக்குத் துரோகம் செய்ய நான் கனவிலும் கருதியதில்லை. சக்கரவர்த்தியின் கட்டளையின் பேரிலேயே வந்தேன். அவர் தங்களிடம் விண்ணப்பித்துக் கொள்ளச் சொன்னதைத்தான் சொல்கிறேன். சக்கரவர்த்தியின் காலத்துக்குப் பிறகு மதுராந்தகர் சிங்காதனம் ஏற விரும்புகிறார். பழுவேட்டரையர்கள் அதற்காகச் சதி செய்கிறார்கள். ஆனால் சக்கரவர்த்தி இப்போதே மதுராந்தகருக்கு முடிசூட்டி விட்டுச் சிங்காதனத்திலிருந்து விலகிக் கொள்ள விரும்புகிறார். இதற்குத் தங்கள் சம்மதத்தைப் பெற்று வரும்படி என்னை அனுப்பியிருக்கிறார்......''

''சக்கரவர்த்தி அவ்விதம் செய்ய விரும்பலாம். ஆனால் அதற்கு என்னுடைய சம்மதம் ஒருநாளும் கிட்டாது. என் பதியின் விருப்பத்துக்கு விரோதமான இந்தக் காரியத்தை நான் ஒப்புக் கொள்ள மாட்டேன். கல்விக் கடலின் கரை கண்ட முதல் அமைச்சரே! சக்கரவர்த்தியே சொன்னாலும் தாம் இந்த முறை தவறான காரியத்தை என்னிடம் சொல்ல எப்படி வந்தீர்? சோழ சிங்காதன உரிமையைப் பற்றித் தமக்கும் எனக்கும் மட்டும் தெரிந்த சில உண்மைகள் இருக்கின்றனவென்பதை நீர் அடியோடு மறந்து விட்டீரோ......?''

''அம்மணி! நான் எதையும் மறக்கவில்லை. தங்களுக்குத் தெரியாத சில உண்மைகளும் எனக்குத் தெரியும். ஆகையினாலேயே சக்கரவர்த்தியின் தூதனாகத் தங்களிடம் வந்தேன்......''

''ஐயா! தங்களுடைய மதிநுட்பமும் இராஜ தந்திரமும் உலகம் அறிந்தவை. அவற்றைப் பெண் பாலாகிய என்னிடம் காட்ட வேண்டாம்......''

''பெருமாட்டி! தங்களிடம் நான் வாதமிட வரவில்லை. என் சாமர்த்தியத்தைக் காட்டுவதற்கும் வரவில்லை. இந்தச் சோழ நாட்டைப் பேரபாயத்திலிருந்து காப்பாற்றி அருளும்படி மன்றாடிப் பிரார்த்தனை செய்ய வந்தேன்......''

''தங்கள் பிரார்த்தனையைப் பிறை சூடும் பெருமானிடம் செலுத்திக் கொள்ளுங்கள். அல்லது தங்கள் இஷ்ட தெய்வமான விஷ்ணுமூர்த்தியிடம் பிரார்த்தனை செய்யுங்கள்......''

''ஆம், தாயே! தாங்கள் பெரிய மனசு செய்யாமற் போனால், அம்பலத்தானும் அரங்கத்தானும் தான் இந்த நாட்டைக் காப்பாற்ற வேண்டும்.''

''அப்படி என்ன ஆபத்து இந்த நாட்டுக்கு வந்துவிட்டது? மதுராந்தகன் சிங்காதனம் ஏறுவதால் அதை எப்படித் தடுக்க முடியும்?''

''கேளுங்கள், பெருமாட்டி! இன்றைக்கு இந்நகர மாந்தர் கொதித்தெழுந்தது போல் காஞ்சீபுரத்திலிருந்து இராமேசுவரம் வரை உள்ள மக்கள் இன்னும் இரண்டு மூன்று நாளைக்குள் ஆத்திரமடைந்து கொதித்தெழுவார்கள். அத்துடன் முடிந்து விடாது. இலங்கையிலிருந்து பூதிவிக்கிரமகேசரி ஏற்கெனவே படை திரட்டிக் கொண்டு புறப்பட்டு விட்டார் என்று அறிகிறேன். ஆதித்த கரிகாலனுக்குச் செய்தி எட்டும்போது அவனும் பொறுக்க மாட்டான். வட திசைச் சைன்யத்துடன் தஞ்சையை நோக்கிக் கிளம்புவான். பழுவேட்டரையர்களும் மற்றச் சிற்றரசர்களும் ஏற்கெனவே படை திரட்டிக் கொண்டிருக்கிறார்கள். கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் நடந்த யுத்தத்தைப்போன்ற பயங்கரமான தாயாதிச் சண்டை இந்த நாட்டில் நடைபெறும். தங்களுடைய உற்றார் உறவினர் எல்லாரும் அழிந்து படுவார்கள். இதையெல்லாம் தாங்கள் பார்த்துக் கொண்டிருக்கப் போகிறீர்களா?.....''

''ஐயா! மதிநுட்பம் மிகுந்த முதல் மந்திரியே! எனக்கு உற்றார் உறவினர் என்று யாரும் இல்லை. மேற்கே மலை நாட்டில் அவதரித்த சங்கரர் என்ற மகா புருஷரைப் பற்றித் தாங்கள் கேள்விப்பட்டிருப்பீர். அந்த மகான்,

'மாதாச பார்வதி தேவி
பிதா தேவோ மகேச்வர:
பாந்தவா: சிவபக்தாஸ்ச'

என்று அருளியிருக்கிறார். என்னுடைய அன்னை பார்வதி தேவி; என் தந்தை பரமசிவன்; என் உற்றார் உறவினர் சிவபக்தர்கள். இந்த உலகில் வேறு பந்துக்கள் எனக்கு இல்லை......

''அம்மணி! அதே சுலோகத்தில் சங்கரர் அருளியுள்ள நாலாவது வாக்கியத்தைத் தங்களுக்கு நினைவூட்டுகிறேன்.

'ஸ்வதேசோ புவனத்ரய:

என்றும் அவர்தான் சொல்லியிருக்கிறார். நாம் பிறந்த தேசம்தான் நமக்கு மூன்று உலகமும். தங்களுடைய சொந்த நாடு உள்நாட்டுச் சண்டையினால் அழிந்து போவதைத் தாங்கள் பார்த்துக் கொண்டிருப்பீர்களா?''

''என்னுடைய சொந்த தேசம் எனக்கு மூன்று உலகத்தையும் விட அருமையானதுதான். ஆனால் இந்தச் சாண் அகலத்துச் சோழ நாடுதான் நம்முடைய சொந்த நாடா? ஒருநாளுமில்லை. வடக்கே கைலயங்கிரி வரையில் உள்ள நாடு என்னுடைய நாடு. சோழ நாட்டில் இடமில்லா விட்டால் நான் காசி க்ஷேத்திரத்துக்குப் போவேன். காஷ்மீரத்துக்கும் க்கலாசத்துக்கும் போவேன். அப்படி யாத்திரை கிளம்பும் யோசனை எனக்கு வெகுநாட்களாக உண்டு. அதற்கு உதவி செய்யுங்கள்......''

''தாயே! தெற்கே திரிகோண மலையிலிருந்து வடக்கே இமோத்கிரி வரையில் உள்ள தேசம் நமது ஸ்வதேசம் என்று ஒத்துக் கொள்கிறேன். இப்படிப் பரந்துள்ள பாரத புண்ணிய பூமிக்குத் தற்போது பேரபாயம் நேர்ந்திருக்கிறது. பட்டாணியர்கள், துருஷ்கர்கள், மொகலாயர்கள், அராபியர்கள் என்னும் சாதியினர் பொங்கிக் கிளம்பி எந்தப் புது நாட்டைக் கைப்பற்றலாம் என்று புறப்பட்டிருக்கிறார்கள். ஆயிரம் வருஷங்களுக்கு முன்பு யவனர்களும் ஹூணர்களும் படையெடுத்து வந்தது போல் இந்தப் புதிய மதத்தினர் இப்போது அணி அணியாக இந்நாட்டின் மீது படையெடுக்கப் புறப்பட்டிருக்கிறார்கள். இவர்களுடைய மதம் விசித்திரமான மதம். கோயில்களை இடிப்பதும் விக்கிரகங்களை உடைப்பதும் புண்ணியம் என்று நம்புகிறவர்கள். அம்மணி! இவர்களைத் தடுத்து நிறுத்தக் கூடிய பேரரசர்கள் யாரும் இப்போது வடநாட்டில் இல்லை. சோழ நாட்டு வீரர்கள் கங்கை நதி வரையில், அப்பால் இமயமலை வரையில் சென்று பெரிய பாரத சாம்ராஜ்யத்தை ஸ்தாபிக்கப் போகிறார்கள் என்றும், கோயில்களை இடிக்கும் கூட்டங்களைத் தடுத்து நிறுத்தப் போகிறார்கள் என்றும் அடியேன் கனவு கண்டு வந்தேன். அந்தக் கனவை நனவாக்கத் தாங்கள் உதவி செய்யுங்கள். மதுராந்தகனுக்குப் பட்டம் கட்டச் சம்மதித்துச் சோழ நாட்டில் தாயாதிச் சண்டை ஏற்படாமலிருக்க உதவி புரியுங்கள்!''

இதைக்கேட்ட செம்பியன் மாதேவி சிறிது நேரம் சிந்தனையில் ஆழ்ந்திருந்தார். பின்னர்,

''ஐயா! ஏதேதோ இந்தப் பேதைப் பெண்ணுக்கு விளங்காத விஷயங்களைச் சொல்லி என்னைக் கலங்க அடித்து விட்டீர்கள். இந்தப் புண்ணிய பாரத பூமிக்கு அப்படிப்பட்ட ஆபத்து நேரிடுவதாயிருந்தால், அதைச் சர்வேசுவரன் பார்த்துத் தடுக்கவேண்டுமேதவிர, இந்த அபலையினால் என்ன செய்ய முடியும்? என்னுடைய கணவர் இறைவனடியைச் சேரும் சமயத்தில், எனக்குச் சொல்லி விட்டுப் போனதை ஒருநாளும் நான் மறக்க மாட்டேன். அதற்கு விரோதமான காரியம் எதுவும் நான் செய்ய மாட்டேன்!'' என்றார்.

''அப்படியானால், இதுவரையில் தாங்கள் அறியாத ஓர் உண்மையை இப்போது நான் தெரியப்படுத்தியாக வேண்டும்!'' என்றார் அநிருத்தர்.

இச்சமயத்தில் மதுராந்தகன் அங்கே தடபுடலாகப் பிரவேசித்து, ''அம்மா! இது என்ன, நான் கேள்விப்படுவது? அருள்மொழிவர்மனைக் க ட ல்



கொண்டு விட்டதா?'' என்று கேட்டான்.

''பெருமாட்டி! தங்கள் செல்வக் குமாரருக்கு ஆறுதல் சொல்லுங்கள். நான் சொல்ல விரும்பியதை இன்னொரு சமயம் சொல்லிக் கொள்கிறேன்'' என்று முதன் மந்திரி கூறி விட்டுக் கிளம்பினார்

அவர் வாசற்படி தாண்டியதும் மதுராந்தகன் ''இதோ போகிறாரே, இவர் தான் என்னுடைய முதன்மையான சத்துரு. நான் இங்கிருக்கும் போதே தங்களுக்குத் துர்ப்போதனை செய்ய வந்து விட்டார் அல்லவா?'' என்று இளவரசன் மதுராந்தகன் கூறியது அநிருத்தரின் காதிலும் விழுந்தது.

## அத்தியாயம் 27
## குந்தவையின் திகைப்பு

முதன் மந்திரி அநிருத்தர் குந்தவை தேவியின் அரண்மனையை அடைந்தார். இளவரசி அவரைப் பார்த்ததும் எழுந்து நின்று நமஸ்கரித்தாள்.

''வீரத்திலும் குணத்திலும் சிறந்த கணவனை அடைந்து நீடூழி வாழ்வாயாக!'' என்று முதன் மந்திரி அநிருத்தர் ஆசீர்வதித்தார்.

''ஐயா! இந்தச் சமயத்தில் இத்தகைய ஆசீர்வாதத்தைத்தானா செய்வது?'' என்றாள் இளவரசி.

''ஏதோ இக்கிழவனுக்குத் தெரிந்த ஆசியைக் கூறினேன். வேறு எந்த ஆசியைக் கோருகிறாய், அம்மா!''

''என் அருமைத் தந்தையின் உடல்

நிலையைப் பற்றி எல்லாரும் கவலைப் பட்டுக் கொண்டிருக்கிறோம். அருள் மொழி வர்மனைப் பற்றி நாடெல்லாம் கவலையில் ஆழ்ந்திருக்கிறது...''

''ஆனால் உன்னுடைய திருமுகத்தில் அதைப் பற்றிய கவலை எதையும் நான் காணவில்லையே, தாயே!''

''வீர மறக் குலத்தில் பிறந்தவள் நான். எல்லாரையும் போல் அபாயம் என்றதும் அழுது கொண்டிருக்கச் சொல்கிறீர்களா?''

''ஒருநாளும் அவ்விதம் சொல்ல மாட்டேன். என்னைப் போன்ற வீர மற்ற ஜனங்களுக்கு இளவரசி ஆறுதல் கூறும்படிதான் சொல்கிறேன்.''

''ஆச்சாரியரே! தங்களுக்கா நான் ஆறுதல் கூற வேண்டும்? உலகமே புரண்டாலும் நிலை கலங்காத வயிர நெஞ்சம் படைத்தவராயிற்றே, தாங்கள்?''

''அப்படிப்பட்ட என்னையும் கலக்கி விடுகிறாய், அம்மா! அந்தப்புரத்துப் பெண்கள் ஆடல் பாடல் களில் ஆனந்தமாகக் காலங்கழித்து வர வேண்டும். அதைவிட்டு இராஜாங்க விஷயங்களில் நீ தலையிட்டதனால் எத்தகைய விபரீதம் நேர்ந்தது பார்த்தாயா!''

''ஐயோ! இது என்ன பழி? நான் எந்த இராஜாங்க விஷயத்தில் தலையிட்டேன்? என்னால் என்ன விபரீதம் நடந்துவிட்டது?''

''இன்னும் சில காலத்துக்குப் பொன்னியின் செல்வன் இலங்கையிலேயே இருக்க வேண்டும் என்று நான் சொல்லி விட்டு வந்தேன். அதற்கு விரோதமாக நீ உடனே புறப்பட்டு வரும்படி உன் தம்பிக்கு ஓலை அனுப்பினாய். உன் விருப்பத்துக்கு மாறாக இந்தக் கிழவன் பேச்சை யார் மதிப்பார்கள்? அதனால் நேர்ந்துவிட்ட விபத்தைப் பார்த்தாயா? சோழநாட்டு மக்களின் கண்ணுக்குக் கண்ணான இளவரசனைக் கடல் கொண்டு விட்டது. சற்று முன் இந்த அரண்மனை வாசலில் ஜனத்திரள் கூடி ஆர்ப்பாட்டம் செய்ததைப் பார்த்தாய். இம்மாதிரி நாடெங்கும் இன்று குழப்பம் நடந்து வருகிறது. இந்த அல்லோல கல்லோலத்துக்குக் காரணம் நீ அல்லவா, தாயே!''

''என்னுடைய ஓலையைப் பார்த்து விட்டு அருள்மொழி வர்மன் இலங்கையிலிருந்து புறப்பட்டான் என்று ஏன் சொல்கிறீர்கள்? பழுவேட்டரையர்கள் இரண்டு கப்பல்கள் நிறைய வீரர்களை அனுப்பி இளவரசனைச் சிறைப் பிடித்துக்கொண்டு வரச் செய்தது உமக்குத் தெரியாதா?''

''தெரியும், அம்மா! தெரியும்! அத்துடனிருந்தால், இப்போது பொன்னியின் செல்வனுக்கு நேர்ந்துவிட்ட கதிக்குப் பழுவேட்டரையர்களைப் பொறுப்பாளிகளாக்கலாம். அவர்கள் அனுப்பிய கப்பல்கள் இரண்டும் நாசமாகி விட்டன. உன்னுடைய ஓலைக்காகத்தான் இளவரசன் புறப்பட்டான் என்று அவர்கள் சொன்னால் யார் அதை மறுக்க முடியும்?''

''ஐயா? நான் ஓலை அனுப்பியது தங்களுக்கு எப்படித் தெரியும்? பழுவேட்டரையர்களுக்கு எப்படித் தெரியும்?''

''நல்ல கேள்வி கேட்டாய், அம்மா! எங்களுக்கு மட்டும்தானா தெரியும்? உலகத்துக்கெல்லாம் தெரியும். நீ அனுப்பிய தூதன் இலங்கையில் முதலில் நம் வீரர்களால் சிறைப்படுத்தப் பட்டான். அதனால் இலங்கையில் உள்ளவர்களுக்கெல்லாம் தெரியும். அவனோடு கோடிக்கரை வரையில் சென்ற வைத்தியர் மகன் மூலமாக இந்த நாட்டில் உள்ளவர்களுக்கெல்லாம் தெரியும். நீ அந்தரங்கமாகச் செய்த காரியம் இவ்வளவு தூரம் அம்பலமாகியிருக்கிறது! ஆகையினாலேதான் ஸ்திரீகள் இராஜாங்க காரியங்களில் தலையிடக் கூடாது என்று நம் பெரியோர்கள் சொல்லியிருக்கிறார்கள்.''



குந்தவை சிறிது நேரம் திகைத்துப் போய் நின்றாள். மறு மொழி என்ன சொல்வது என்று அவளுக்குத் தெரியவில்லை. முதன் மந்திரி நன்றாகத் தன்னை மடக்கி விட்டார். அவர் சொல்வதில் உண்மை இருக்கத்தான் இருக்கிறது. இந்த எண்ணம் தோன்றியதும் வாணர் குல வீரன் மீது அவளுக்குக் கோபம் எழுந்தது. வீர சாகஸச் செயல்கள் அவன் செய்யக் கூடியவன் தான். ஆனால் காரியத்தைப் பகிரங்

கப்படுத்திக் கெடுத்து விட்டானே? அவனைப் பார்த்து நன்றாகக் கண்டிக்க வேண்டும். இவ்வாறு எண்ணியதும் முதன் மந்திரியின் கட்டளையின்படி அவன் சிறைப்படுத்தப்பட்டது நினைவு வந்தது. என்னவெல்லாம் தொந்தரவுக்கு ஆளாக்கிக் கொண்டு என்க்கும் தொந்தரவு அளிக்கிறான்? சற்று நேரம் சும்மா இருக்கக் கூடாதா? வைத்தியர் மகன் ஏதாவது உளறினால் அதற்காக அவன் பேரில் மேல் மாடத்திலிருந்து பாய்ந்து சண்டை துவக்கியிருக்க வேண்டுமா?

"ஐயா! ஒரு கோரிக்கை செய்து கொள்கிறேன். பெரிய மனசு செய்து நிறைவேற்றித் தர வேண்டும்."

"தேவி! கட்டளை இடு! இந்த இராஜ்யத்தில் உன்னுடைய வார்த்தைக்கு மறு வார்த்தை ஏது?"

"தாங்கள் அரண்மனை வாசலுக்கு வரும் சமயத்தில் இரண்டு பேர் சண்டை போட்டுக் கொண்டிருந்தார்கள். அவர்களைச் சிறைப்படுத்தத் தாங்கள் கட்டளையிட்டீர்கள்."

"அவர்கள் செய்தது பெருங்குற்றம். அரண்மனையில் மகாராணியின் கண் முன்னால் அவர்கள் சண்டை தொடங்கியது பெரும் பிசகு! அதுவும் எப்பேர்ப்பட்ட சமயத்தில்? பெரும் ஜனக் கூட்டம் கொதிப்புடனிருந்த நேரத்தில். காரணம் தெரியாத ஜனங்கள் தாங்களும் சண்டையில் கலந்து கொண்டிருந்தால் எத்தகைய விபத்து நேர்ந்திருக்கும்? சிறு நெருப்புப் பொறி பெருங் காட்டையே அழிப்பது போல் நாடு நகரமெல்லாம் கலகமும் குழப்பமும் விளைந்திருக்குமே?"

"ஆம், ஐயா! அவர்கள் செய்தது பெரும் குற்றம்தான். ஆயினும் அவர்களில் ஒருவனை மன்னித்து விடுதலை செய்யும்படி தங்களை மன்றாடி வேண்டிக் கொள்கிறேன்."

"இளவரசியின் அருளுக்குப் பாத்திரமான அந்தப் பாக்கியசாலி யார்?"

"நான் இலங்கைத் தீவுக்கு அனுப்பிய தூதன் அவன்தான்."

"பழம் நழுவிப் பாலில் விழுந்தது போலாயிற்று."

"எதனால் அவ்வாறு சொல்கிறீர்கள்?"

"அந்தத் தூதனை நானே சிறைப்படுத்த வேண்டும் என்றிருந்தேன். இங்கே அவனாகவே எளிதில் அகப்பட்டுக் கொண்டான்."

"எதற்காக? என்ன குற்றத்திற்காக?"

"தாயே! அவன்பேரில் பயங்கரமான குற்றம் சாட்டப்பட்டிருக்கிறது."

"அது என்ன?"

"பொன்னியின் செல்வனை அவன் தான் கடலில் தள்ளி மூழ்க அடித்து விட்டான் என்று."

"என்ன நாராசமான வார்த்தைகள்! யார் அப்படிக் குற்றம் சாட்டுவது?"

"பலரும் அவ்வாறு குற்றம் சாட்டுகிறார்கள். இளவரசரைக் கப்பலில் ஏற்றிக் கொண்டு வந்த பார்த்திபேந்திரன் சொல்கிறான். பழுவேட்டரையர்கள் 'இருக்கலாம்' என்கிறார்கள். நானும் சந்தேகிக்கிறேன்!"

"ஆச்சாரியரே! ஜாக்கிரதை! நான் ஒரு கொலைகாரனைப் பிடித்து அனுப்பி என் நம்பியைக் கொன்று விட்டு வரச் சொன்னதாகவா சந்தேகிக்கிறீர்!"

"ஒருநாளும் இல்லை, தாயே! அவனை உனது நம்பிக்கைக்குரிய தூதன் என்று நினைத்துக் கொண்டு தான் நீ அனுப்பினாய். அது தவறாயிருக்கலாம் அல்லவா? அவன் மாற்றார்களின் ஒற்றனாயிருக்கலாம், அல்லவா?"

"இல்லவே இல்லை. ஆதித்த கரிகாலன் அவனை என்னுடைய உதவிக்கு அனுப்பினான். அவனைப் பூரணமாக நம்பலாம் என்று எழுதி அனுப்பினான்......"

"ஆதித்த கரிகாலனும் ஏமாந்திருக்கலாம் அல்லவா, இளவரசி? வழியில் அவன் மாற்றப்பட்டும் இருக்கலாம் அல்லவா? நான் இங்கே வரும் போது 'ஒற்றன்' என்ற குற்றச்சாட்டு என் காதில் விழுந்தது. மேலே இருந்தவனைப் பார்த்துக் கீழே நின்றவன் குற்றம் சாட்டினான். அது என்ன, அம்மா?"

"மேலே நின்றவன்தான் என் தமையன் அனுப்பிய தூதன். வாணர் குலத்தில் வந்த வல்லவரையன் வந்தியத்தேவன். கீழே நின்றவன் வைத்தியர் மகன் பினாகபாணி. வந்தியத்தேவ



## அருள்வாக்கு

ஒரு பணக்காரனுக்கும் தன்னைவிடப் பணம் படைத்த ஒருத்தனைப் போல் தானும் இருக்க வேண்டும் என்ற எண்ணம் இருக்கிறது; ஆடம்பரத்துக்கும் டாம்பீகத்துக்கும் ஊதாரித்தனமாகச் செலவழித்துக் கடன் படுகிறான். உலகத்தில் பணக்காரனுக்குத் தான் ஜாஸ்திக் கடன் இருக்கிறது. இது விசித்திரமாக, வேடிக்கையாகத் தோன்றினாலும் வாஸ்தவ நிலை இதுதான் — ஏழைகள் எத்தனையோ பேர் கடன் இல்லாமல் இருக்கிறார்கள். பணக்காரர்களில் கடன் இல்லாமலிருப்பவர்கள் துர்லபமாகத்தான் இருப்பார்கள். போலி அந்தஸ்தை விட்டால் அவனுக்கு இத்தனை செலவு; கடன் இருக்கவே இருக்காது. லோகத்தில் எத்தனையோ பேர் கஷ்டப்படுகிற போது நாம் இத்தனை டாம்பீகங்கள் செய்வது நியாயமா என்று அவரவரும் கேட்டுக் கொண்டு செலவைத் தர்ம நியாயமாகக் கட்டுப்படுத்திக் கொண்டால் எத்தனையோ தான தர்மம், பரோபகாரம் செய்யலாம். லோகத்தில் ஒருத்தருக்கும் சாப்பாடு இல்லை, துணி இல்லை என்கிற குறையில்லாமல் செய்துவிடலாம். இப்போது செய்கிற டாம்பீகத்தால் ஒருநாளும் பெற முடியாத ஈசுவரானுக்கிரகத்தையும் இந்தப் பரோபகாரத்தினால் பெற்று விட முடியும். ஏழைதான் என்றில்லை, பணக்காரனும் கூட, 'இந்த வஸ்து நமக்குத் தேவை தானா? இது இல்லாவிட்டால் பிராணன் போய்விடுமா? இது இல்லாமல் ஜீவிக்க முடியாதா? நம் அப்பாவும் தாத்தாவும் இது இல்லாமலே சௌக்கியமாக இல்லையா?'' என்று அவ்வப்போதும் கேட்டுக் கொண்டு செலவழிப்பதில் கணக்காயிருக்கணும். இப்படிச் செய்தால் கொடுப்பதில் கணக்கில்லாமலிருக்க முடியும். எடுக்க எடுக்க ஊற்றில் ஜலம் வருகிற மாதிரி கொடுக்கக் கொடுக்க மகாலக்ஷ்மியின் அனுக்கிரகம் மேலும் வளரும்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

---

னைப் பழுவேட்டரையர்களின் ஒற்றன் என்று வைத்தியர் மகன் குற்றம் சாட்டினான். என்ன அறிவீனம்?''

''ஏன் இருக்கக் கூடாது, தாயே?''

''ஒருநாளும் இருக்க முடியாது. பழுவேட்டரையர் காவலிலிருந்து அவன் தப்பி வந்தவன். அவனைத் திரும்பக் கைப்பற்றப் பழுவேட்டரையர்கள் எத்தனையோ ஆட்களை அனுப்பிப் பிரம்மப் பிரயத்தனம் செய்தார்கள்......''

''அவனிடம் பழுவூர் முத்திரை மோதிரம் எவ்விதம் வந்தது தாயே?''

''அந்த வஞ்சக அரக்கி, — மாய மோகினி, — விஷ நாகம், — தயவு செய்து மன்னித்துக் கொள்ளுங்கள், — பழுவூர் இளையராணி கொடுத்துத்தான் அவனுக்கு அம்மோதிரம் கிடைத்தது.''

''அது உனக்குத் தெரிந்திருப்பது பற்றிச் சந்தோஷப்படுகிறேன். நான் சொன்னால் நீ நம்பியிருக்க மாட்டாய். அந்த வல்லத்து வீரன் பழுவேட்டரையர்களின் ஒற்றன் அல்ல என்பது சரி. ஆனால் பழுவூர் ராணியின் ஒற்றனாயிருக்கலாம் அல்லவா?''

''அது எப்படி முடியும்?''

''எப்படி முடியும் என்று சொல்லுகிறேன். வந்தியத்தேவன், — நீ இலங்கைக்கு அனுப்பிய அந்தரங்கத்தூதன், — தஞ்சைக் கோட்டைக்கு வெளியில் பழுவூர் ராணியைப் பல்லக்கில் சந்தித்தான். அப்போது முத்திரை மோதிரத்தைப் பெற்றுக் கொண்டான். பிறகு, கோட்டைக்குள் பழுவூர் அரண்மனையின் அந்தப்புரத்தில் அவளைச் சந்தித்தான். அவனைப் பழுவூர் இளையராணி பொக்கிஷ நிலவறையில் ஒளித்து வைத்திருந்து வெளியே அனுப்பினாள். உன்னிடம் ஓலை கொண்டு வரப்போகிறான் என்று அவளுக்குத் தெரியும். இலங்கையிலிருந்து அவன் திரும்பி வரும் போது அரிச்சந்திர நதிக்கரையில் பாழடைந்த பாண்டியன் அரண்மனையில் நள்ளிரவில் அவர்கள் இருவரும் சந்தித்துப் பேசினார்கள். அதற்குப் பிறகும் பழுவூர் முத்திரை மோதிரம் வந்தியத்தேவனிடம் இருக்கிறது. இதையெல்லாம் பற்றி நீ என்ன நினைக்கிறாய். அம்மா! உன் தூதனிடம் இன்னமும் பரிபூரண நம்பிக்கை வைத்திருக்கிறாயா?''

குந்தவையின் உள்ளம் இப்போது உண்மையாகவே குழப்பத்தில் ஆழ்ந்தது.

(தொடரும்)

# விவேகானந்தா கல்விநிலையத்தின் வேண்டுகோள்!

## அன்புள்ள மாணவர்களே,

## வணக்கம்.

ஆங்கில மொழியை எளிய தமிழ் மூலம் சிறந்த முறையில் நேரிலும் தபால் முறையிலும் பயிற்சியளிப்பதில் தமிழகத்தின் தலைசிறந்த கல்வி நிலையம் என்ற தனிப்புகழை நமது விவேகானந்தா கல்வி நிலையம் பெற்று வருகிறது என்பது உங்களுக்குத் தெரிந்ததே.

நமது விவேகானந்தா கல்வி நிலையத்தின் ஆங்கிலப் பயிற்சி பாடங்கள் அனைத்தும் கல்வித்துறையில் நீண்டகால அனுபவம் பெற்ற ஆசிரியர் குழுவினரால் அல்லும் பகலும் அயராது பாடுபட்டு உருவாக்கப் பட்டவைகளாகும்.

ஆங்கிலப் பயிற்சிப் பாடங்களின் ஒவ்வொரு வரியையும் பலமுறை யோசித்து இப்படிச் சொன்னால் மாணவர்களுக்குப் புரியுமா? இதை இன்னும் எளிதாகச் சொல்ல முடியுமா? என்றெல்லாம் நீண்ட விவாதங்கள் நடத்தி ஒவ்வொரு ஆசிரியரும் தனது அனுபவத்தை பாடங்களில் இழையோடவிட்டு ஏறக்குறைய நான்கு ஆண்டுகளுக்கு மேல் பாடுபட்டு நமது கல்வி நிலையப் பாடங்களை வடிவமைத்திருக்கிறோம்.

ஆனால் இவ்வளவு கஷ்டப்பட்டு ஆர்வத்துடன் தயாரிக்கப்பட்டுள்ள நமது கல்வி நிலையப் பாடங்களை ஒரு சில இன்ஸ்டிடியூட்டுகள் அப்பட்டமாக அப்படியே காப்பி அடித்து அவர்களது நிறுவனத்தின் பெயர்களில் வெளியிட்டு மாணவர்களை ஏமாற்றி வருவதாக எங்களுக்கு தகவல்கள் வந்து கொண்டிருக்கின்றன.

இத்தகைய கல்வி நிறுவனங்கள் மீது நாங்கள் சட்டப்படி விரைவில் நடவடிக்கை எடுக்க இருக்கிறோம்.

இத்தருணத்தில் நீங்கள் இது போன்ற கல்வி நிறுவனங்களுடன் தொடர்பு கொண்டு ஏமாறாமல் **விவேகானந்தா கல்வி நிலையம், 9, மேட்லி ரோடு, தி.நகர், சென்னை - 600 0.17.** என்ற முகவரியுடன் மட்டும் தொடர்பு கொண்டு பயன்பெற வேண்டுகிறோம்.

நன்றி

கல்விப் பணியில் தங்கள்

## விவேகானந்தா கல்வி நிலையம்

**குறிப்பு: எங்களுக்கு மேற்கண்ட முகவரியைத் தவிர வேறு கிளை நிறுவனங்களோ / சார்பு நிறுவனங்களோ கிடையாது.**

சாமர்செட் மாம் தமது 'புத்தகங்களுக்கு வைக்கும் தலைப்புகளினால் கவரப்பட்ட புது எழுத்தாளர் ஒருவர் அவரிடம் சென்று தமது நாவலைக் கொடுத்துப் பெயர் சூட்டும்படி கேட்டுக் கொண்டார்.



"பெயரிடுவதற்காக நாவலைப் படிக்கத் தேவையில்லை" என்று கூறிய மாம் "உங்களுடைய நாவலில் பறை (Drum) வருகிறதா?" என்று வினவினார்.

"இல்லை."

"ஊதுகுழல் (Bugles) ஏதாவது வருகிறதா?"

"இல்லவே இல்லை!"

"அப்படியானால் ரொம்ப நல்லதாய்ப் போயிற்று. 'பறை இல்லை — ஊதுகுழல் இல்லை' (No Drums, No Bugles) என்று தலைப்புச் சூட்டி விடுங்கள்" என்றார் சாமர்செட் மாம்!

— காயத்ரி.

## நாவலுக்குப் பெயர் சூட்டுவது எப்படி?

திருநெல்வேலியில் சில லாட்டரி கடைகளில் ஒரே சமயத்தில் ஐந்து ரூபாய்க்கு லாட்டரி சீட்டு வாங்கினால் கூடவே இலவசமாக ஒரு கூப்பன் தருகிறார்கள். அதில் முதல் பரிசு எவர் சில்வர் குடம். இரண்டாவது பரிசு ரெக்ஸின் பை (bag) என்று குறிப்பிடப்பட்டுள்ளது. லாட்டரி சீட்டே ஒரு சூதாட்டம். அந்த சூதாட்டத்திற்குள் மற்றொரு சூதாட்டம் நடக்கிறது. நிர்வாகம் இதைக் கவனிக்குமா?

— எஸ். முகம்மது யூசுப்.



# உண்மை அலைகள் உயரட்டும்!

**வாலி**

அலைகள் உயர்ந்தபின்னால்
அடுத்தவோர் நொடியிலேயே
தலைகள் தாழ்ந்த வண்ணம்
தாயிடம் போயடங்கும்;
உலைகள் உணவு ஆக்க,
உதவிடும் நுகர்பொருட்கள்,
விலைகள் உயர்ந்தபின்னால்
வீழ்ந்ததாய் வரலாறில்லை!

பட்டுதான் தெறித்தபோதும்
பாறையில் மேலும் மேலும்
முட்டுமாம் அலைகள் போலும்
மூடர்நம் நாட்டில் உண்டு;
துட்டுதான் சேர்த்தவர்க்கே
தொடர்ந்திவர் வாக்களித்தால்
கெட்டுதான் போகும் நாடு;
கூறினால் வெட்கக்கேடு!

இந்திரா அலைகளாலும்
எம்ஜியார் அலைகளாலும்
வந்தவர் அமைச்சராகி
வசதியாய் வாழக்கற்றார்;
எந்தவோர் அலையினாலும்
இந்தநாள் வரையிலிங்கே
பந்தியில் சோறு வந்து
பாமரன் புசித்ததில்லை!

உண்மையில் மாந்தருக்குள்
உணர்வலை எழும்புமாயின்
வண்மைகள் சேரும் நாட்டில்
வறுமைகள் விலகிச் சாகும்!
அண்மையில் நல்லகாலம்
அனைவரும் காணலாகும்;
திண்மைகள் உள்ளவர்பால்
தேசத்தை வழங்குவீரே!

வண்ணப்படம் : அமித் குரு

# மனத்தில் இருப்பதை.

வீடு ஒரே நிசப்தமாக இருந்தது. எல்லோரும் அவரவர் வேலையை மௌனமாக, பய பக்தியாகச் செய்வது போல் பட்டது ஹேமாவுக்கு. எப்பொழுதும் விளையாட்டாகப் பேசும் சுந்தர் கூட இன்று கப்சிப்பாகி இருந்தான். அவனுக்கும் அக்காவைப் பார்க்க வரும் பையனுக்கு இவளைப் பிடிக்குமோ என்ற கவலையா? இவள் வீட்டை விட்டுப் போய் விட்டால் பிறகு யார் தன் தினசரித் தேவைகளைப் பூர்த்தி செய்வார்கள் என்ற கவலையா?

ஏன் இப்படி குதர்க்கமாகவே போகிறது மனம்? எல்லோருக்கும் கவலை இருக்காதா, இந்த வரன் அமைந்துவிட்டால் நன்றாகவே இருக்கும் என்று?

ஆனால் என்னால் மட்டும் ஏன் இயல்பாக இருக்க முடியவில்லை. பிடிக்குமா பிடிக்காதா என்பதை இங்கு எல்லோருமே ஒரு தலைப்பட்சமாகத்தான் சிந்திக்கிறார்கள். அதாவது மாப்பிள்ளையாக வரப் போகிறவனுக்குப் பெண்ணைப் பிடித்திருக்கிறதா என்பதுதான் முக்கியம். பெண்ணுக்கும் அவனைப் பிடிக்க வேண்டுமே என்று யாருமே கவலைப் படுவதில்லை.

போன வாரம் ஆபீசிலிருந்து வீட்டில் நுழைந்ததுமே அம்மா ஏதோ அப்பொழுது தான் முதல் முறையாகத் தன்பெண்ணைப் பார்ப்பதுபோல் பூரித்து நின்றாள்.

''என்ன விஷயம், ஸ்வீட்டெல்லாம் பண்ணியிருக்கே?'' —கேட்டாள் ஹேமா.

இன்னிக்கு வெங்கட்டு மாமா வந்திருந்தார். அவர் பெண்ணுக்குப் போன மாதம் தான் கல்யாணம் ஆச்சாம். ரொம்ப நல்ல இடமாம். மாமாவுக்கு ஒரே சந்தோஷம். அதான் மாமாகிட்டே சொன்னேன், நம்ம ஹேமாவுக்கும் அதே மாதிரி நல்ல ஜாதகமா இருந்தால் சொல்லுங்களேன்னு. ஆச்சரியம் பாரு, அவரும் அது விஷயமாகத்தான் வந்தேங்கறார். அவருக்குத் தெரிஞ்ச ஒருத்தன் இருக்கானாம். நிச்சயம் இதை முடிச்சுத்தர்றேன்னார். சர்க்கரை மாதிரி விஷயம் சொன்னாரேன்னு ஸ்வீட் பண்ணினேன்."

சர்க்கரை மாதிரி விஷயம்னு ஸ்வீட் செய்தாளாம். மாப்பிள்ளையும், அதே மாப்பிள்ளை போல் ரொம்ப தங்கமானவன்னு என்ன க்யாரண்டி? ஒருவரைப் போல் மற்றவர் எப்படி இருக்க முடியும்? இதில் இந்த மாமாவுக்கு இந்தப் பையனைத் தெரிந்திருப்பதே பெரிய 'க்வாலிபிகேஷன்' போல் சொன்னது இன்னும் சிரிப்பாக இருந்தது.

''உன்னுடைய போட்டோ கூட ஒண்ணு கேட்டார். கொடுத்து அனுப்பி இருக்



கேன்.''

''என்னைக் கேட்காமல் உன்னை யாரு போட்டோ எல்லாம் தரச் சொன்னது?''

''அட, அக்காவுக்கு எவ்வளவு பயம் பாரேன். எங்கே அம்மா நல்ல போட்டோவா கொடுத்தனுப்பாமே, அவரு பார்த்து ரிஜெக்ட் பண்ணிடுவாரோன்னு கவலைப் படாதே அக்கா, கண்டிப்பா அவருக்குப் பிடிக்கும்படியான போட்டோதான் கொடுத் திருக்கா அம்மா'' – இடையில் சுந்தர் கிண்டலாகக் கூறினான்.

**போ**ட்டோவில் இருந்தது போலவே நேரிலும் இருக்கிறாளா, என்று பார்ப்ப தற்கு இன்று வரப் போகிறானாம் அந்தப் பையன். போட்டோ பார்த்த பிறகும் ஒருத் தன் நேரில் வருகிறான் என்றால், மனத் தில் பிடித்துத்தானே வருவான்? பின் ஏன் கவலை என்றில்லாமல் அந்தப் புடைவை உடுத்திக்கோ. இந்த கலர் வேண்டாம், லைட் கலர் நன்றாக இருக்கும். பளிச்சினு பவுடர் போட்டுக்கோன்னு ஆளாளுக்கு அட்வைஸ் ஏன் பண்ணுகிறார்கள்? இன்று பவுடர் போட்டு, கறுப்பு சிவப்பாகி விடுமா? ஒரே நாளில், அதுவும் சில மணித் துளிகளில் முடிவாகும் உறவு, நிஜமாகவே நிலைத்து இருக்கக் கூடியதா? சில மணி களில் என்னுடைய வாழ்வு நிர்ணயம் செய்யப்பட்டு விடும். என்னைப் பற்றி, என் எண்ணங்களைப் பற்றி, என் ஆசைகளைப் பற்றி அவன் எப்படி எடை போடுவான்?

**அ**வர்கள் எல்லாம் வந்து விட்டுப் போய் விட்டார்கள். இவளை அவனுக்குப் பிடித்த விஷயம் அவனுடைய முகத்திலேயே தெரிந்து விட்டது. வீட்டில் மற்றவர்க்கும் நிம்மதி, அவனுக்கு இவளைப் பிடித்து விட்டது என.

''எனக்கு இந்தப் பையனைப் பிடிக்கலை. நான் செஞ்சுக்க மாட்டேன்.''

''ஏன், இவனுக்கு என்ன? ராஜா மாதிரி

ஆர். ஆனந்தி



ஆள் இருக்கான். நல்ல சம்பளம். பிக்கல், பிடுங்கல் இல்லை. ராணி மாதிரி இருக்கலாம்.''

இங்கு பிக்கல், பிடுங்கல் என்பது நாத்தனாருக்கும், மாமியாருக்கும் செல்லப் பெயர். இதையே நேரில் அவர்களிடம் சொல்ல இவர்களுக்கு எவ்வளவு நாரம் தைரியம் இருக்கும்?

ஏனோ இன்னும் எதிர்க்க வேண்டும் போல் வெறி கிளம்பியது. ''எனக்கு இவனைப் பிடிக்கலை.'' அவன் நிறம், உருவத்தைக் காரணமாகச் சொல்லிப் பார்த்தாள்...

பாய்ந்தார்கள் எல்லோரும் அவள் மீது. தலைக்குத் தலை நீ என்ன உசத்தி, நீ என்ன அவனை விட உயர்ந்து விட்டாய்? போன்று கேள்விகள் கேட்டுத் துளைத்தார்கள். பிறகு இவளைச் சமாதானப்படுத்த,

''பாரு, உருவத்தில் ஒன்றுமில்லை. அவனுடைய குணத்தைப் பாரேன். நன்னா சம்பாதிக்கிறான். நிம்மதியாக இருக்கலாம். அதை விட்டுட்டு அதைப் பிடிக்கலை, இதைப் பிடிக்கலைன்னு என்கிட்ட சொன்ன மாதிரி இன்னும் எல்லார்கிட்டயும் சொல்லாதே'' — அம்மா அவனுடைய எல்லாக் குணத்தையும் தான் அந்தக் கொஞ்ச நேரத்தில் அறிந்து கொண்ட மாதிரி பேசினாள்.

குணம்தான் பார்க்கப்படுகிறது. உருவம் இல்லை என்றால் என் போட்டோவைப் பார்க்காமலேயே அவன் வந்திருக்கலாமே? சொன்னாள்.

''இதோ பார், போற இடத்திலேயும் இப்படி வாயையும், கையையும் காண்பிக்காம, சும்மா அடக்கமா இரு.

அடக்கம் என்பது மனத்தில் தோன்றும் எண்ணங்களைச் சொல்லாமல் இருப்பதா?

யாரோ முன்பின் தெரியாதவன், இனிமேல் வருங்காலத்தில் தன் பெண்ணை வைத்துக் காப்பாற்றப் போகிறவன் என்ற ஆதங்கத்தினால், இவர்கள் ஓரளவு ஜாஸ்தியாகவே அவனைப் புகழ்கிறார்களோ என்று தோன்றியது.

''நாங்கள் முடிவு பண்ணிட்டோம். எங்களுக்குப் பிடிச்சிருக்கு. நல்ல குணம், சம்பளம், தொந்தரவு இல்லாம இனிமேல் இந்த மாதிரி வரன் கிடைக்காது. பேசாமல் பண்ணிக்கோ'' — இனிமேல் வரன் பார்க்கும் வேலை என்னால் முடியாது என்று சொல்லாமல் சொன்னார் அப்பா.

அன்றிலிருந்து சுரேஷிற்கு இது பிடிக்கும், அவருக்கு அது நன்றாக இருக்கும் என்று அவனை வீட்டு மாப்பிள்ளையாகவே முடிவு செய்தார்கள்.

சுரேஷின் புத்திசாலித்தனம் பாராட்டப் பட்டது. அவனுடைய புத்தி கூர்மை எல்லோரையும் வியக்க வைத்தது. அவன் உட்கார்ந்தால், நின்றால் பண்புமிக்க செயல்களாக இருந்தன. அவன் பழம் வாங்கி வந்தால் அச்செயல் அவனுடைய ெபருந்தன்மையைக் காட்டியது. அவனுடைய இயல்பான செயல்களுக்குக் கூடப் புதிது புதிதாக அர்த்தம் கற்பிக்கப்பட்டது. இவையெல்லாம் எதற்கு? குறிப்பிட்ட தேதியிலிருந்து, என் பொறுப்பு அவன் தலையில் என்பதாலா?

ஹேமா எல்லாவற்றையும் பொறுமையாய்ச் சகித்துக் கொண்டாள்.

கல்யாணமாகி எட்டு மாதங்கள் கழித்து இப்பொழுதுதான் முதன் முதலாக வீட்டிற்கு வருகிறாள். தான் இத்தனை நாள் இந்த வீட்டில் இருந்ததெல்லாம் நினைவுகளாக மெல்ல மேலெழுந்தன. கல்யாணத்திற்கு முன்பு தான் சுரேஷைப் பற்றி நினைத்ததை எல்லாம் எண்ணிப் பார்த்துச் சிரித்துக் கொண்டாள். பரவாயில்லை, மனுஷன் அவ்வளவு மோசமில்லை என்று தோன்றியது. ஒரு வாரத்தில் திரும்பி வந்துவிட வேண்டும் என்று கேட்டுக் கொண்டிருந்தான். அப்பாவிடம் அது பற்றிச் சொன்ன பொழுது,

''ஆமா, இத்தனை நாள் கழிச்சு இப்பத்தானே வந்திருக்கே? இன்னும் ஒரு வாரம் இருந்தால் என்ன? ஏன் மாப்பிள்ளை கோச்சிண்டு சொன்னாரா?''

மாப்பிள்ளை குணாதிசயங்களைப் புகழ் பாடின அப்பாவா கேக்கறது? ஏன் இவர்களுக்குத்தான் அவர் எதுக்குக் கோபிச்சுப்பார், எதுக்கு இல்லை என்று தெரிந்து இருக்கணுமே?

''இல்லைப்பா, நான் திரும்பி வந்துடறதாச் சொல்லி இருக்கேன். நீங்க ரிஸர்வ் பண்ணிடுங்க.'' என்று ஹேமா சொன்னாள்.

மாலையில் கடைத் தெருப் பக்கம் போய் விட்டு, வீட்டிற்குள் நுழைந்த போது, பேச்சுக் குரல்கள் கேட்டன. தன்னைப் பற்றிய பேச்சு வந்ததும் சுவாரஸ்யமாக இருந்தது:

''ஏண்டி, நீ ஹேமாகிட்ட விசாரிச்சியோ, சுரேஷ் எப்படி இருக்கானாம்? முன்கோபம் எல்லாம் ஒண்ணும் இல்லையே? ஏன் முத முதலா வந்திருக்கா, அவளுக்கு ஆசை இருக்காதா, இருந்துட்டுப் போகணும்னு? மூர்க்கனா இருப்பான் போலிருக்கே?''

''என்னமோ போங்க, அது பாவம் வாயே திறக்கலை. என்ன சொல்லி அனுப்பிச்சானோ, என்னமோ. இவளும் கிளம்பிப் போறேனுட்டாள். மனசில் இருக்கிறதை வெளியே காட்டிக்கக் கூட இல்லை.''

இது என்ன கூத்து? சுரேஷ் எப்போது மூர்க்கனாக மாறினார்? எப்போது இவர்களுக்குச் செய்தி வந்தது? என் மனத்தில் இருந்ததை நான் சொன்ன காலத்தில் ஏற்றுக் கொள்ளாதவர்கள், எப்பொழுதில் இருந்து என் மனத்தைப் படிக்க ஆரம்பித்தார்கள்? புரியாமல் குழம்பினாள் ஹேமா.

## 16

சலீம்பாய் பட்டரையருகில் பால் குண்டு ஆட்டோவை நிறுத்தி, அதன் கழுத்தைப் பிடித்துப் பின்பக்கம் தள்ளி, சந்துக்குள் ஒதுக்குப்புறமாக நிறுத்தி விட்டு, "வா பாபு" என்றான்.

"நான் வரலை குரு. நீ மட்டும் போய்க்க."

"வாடான்னா! இதெல்லாம் பார்த்தாத்தான் உனக்கு லைப்ங்கறது என்னான்னு தெரியும். இந்த ஷாக்கு உனக்கு நிச்சயம் வேணும். அப்பதான் நீ பெரிய மன்சனாவ முடியும்."

"நான் வரமாட்டேன். நீ போ."

# இருள் வரும் நேரம்

பால்குண்டு நின்று திரும்பிப் பாபுவின் அருகில் வந்து அவனை இழுத்துச் சென்றான். ஒரு சாரியில் ப்யூஸ் போய் இருட்டாக இருந்தாலும் பட்டரையில் சிறுவர்கள் வெல்டிங் வேலையில் நீலப்பிழம்பு படும்போதெல்லாம் பொறி பறக்க, இரும்புப் பூக்கள் செய்து கொண்டிருந்தார்கள். சந்தோரத்தில் கழுத்தில் கர்ச்சீப்பு கட்டிய தரகன் தூரத்தில் பார்த்துக் கொண்டு புகையிலைக் குதப்பலைத் துப்பினான். "என்னய்யா, காடி, எங்க இத்தனை தூரம்? சவாரிமால் பார்க்கிறயா? புச்சா நெல்லூர் சரக்கு பாபோய். அத்தினி அருமை!"

பாபுவுக்கு இந்தப் பரிபாஷை ஏதும் புரியவில்லை. பால்குண்டு அவனருகில் சென்று ரகசியமாகப் பேசினான். தரகன் பாபுவைப் பார்த்து, "ஓ, அப்படியா! இப்படியே நேராப்போனா ரெண்டாவது சந்து. பத்மராஜு பேர் சொல்லு. உள்ளே விடுவாங்க.

"வாடா!"

"வரலை குரு..."

"வாடான்னா..."

பாபுவுக்குப் போக வேண்டும் போலவும் இருந்தது. இதயம் படபடவென்று அடித்துக் கொள்ள, நல்ல சனநடமாட்ட முள்ள தெருவைத் துறந்து இருட்டான சந்தில் நுழைந்தான். கீழ்ப் பகுதியில் ஷட்டர் போட்டு மூடப்பட்ட கடை. இடதுபுறம் குறுகலான மாடிப்படியில் பதினைந்து வாட் பல்பு தொங்கியது. அதை அடைத்துக் கொண்டு இரண்டு பெண்கள் பேசிக் கொண்டிருக்க, பாபுவும் பால்குண்டுவும் கடக்கும் போது உரசினார்கள். மாடியில் மேசை போட்டு வயசான ஆசாமி கணக்கு எழுதிக் கொண்

சுஜாதா

டிருக்க, வரிசையாக ஆஸ்பத்திரி போலப் படுக்கைகள் போடப்பட்டிருந்தன. ஒரு சிறுவன் மெத்தையைச் சுற்றி எடுத்துச் சென்று கொண்டிருந்தான்.

"லட்சிமி, லட்சிமி! வெய்ட் பண்ணுங்க. அவதான் வேணுமா இல்லை......"

"அவதான் வேணும்" என்றான் பால் குண்டு.

பாபுவின் கன்னத்தில் அவனறியாமல் கண்ணீர் துளிர்த்து, உருவம் பெற்று, பெரிசாகிக் கோடு போட்டு உருண்டது.

பாபுவின் தாய் கலைந்த தலையைச் சரிப்படுத்திக் கொண்டே வந்தாள். "இந்தாளு கிட்ட எஷ்ட்ராவா நாப்பது வாங்கு. தர்றேன்னு சொல்லியிருக்கான். சேட்டு. நோட்டை நீட்டு. எப்டி நம்ம கவிதை?"

"லட்சுமி இவங்க ரெண்டு பேரும் உன்னைப் பார்க்கத்தான் காத்திருக்காங்க."

அவள் கவனிக்காமல், "வரச் சொல்லு ஒருத்தர் ஒருத்தரா" என்று உள்ளே செல்லத்



தலைப்பட்டாள்.

''லட்சுமி! யார் வந்திருக்காங்க பாத்திங்களா?'' என்றான் பால்குண்டு.

பாபு கண்ணீர் வழிய அப்படியே தன் தாயைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

''அட பாபு எப்ப வந்த நீ?''

''இப்பதான்.''

''என்ன ஒரு மாதிரி இருக்கிறே? பணம் கிணம் ஏதாவது வேணுமா? சேட்டு கொஞ்ச நேரம் ரெஸ்ட்டு கொடு. எம் மவன் எப்படி இருக்கிறான் பாத்தியா. சோக்கா அப்டியே அம்பரீஷ் மாதிரி இல்லை? அடுத்த வருஷம் கல்யாணம் கட்டத்தான் போறேன். வயசு இன்னாங்கறே?''

''உனக்கு இத்தனை வயசில மகனா லட்சுமி? நம்பவே முடியலையே!''

''பத்தொம்பதுதான் ஆறது. என்னா வளர்த்தி பாரு. ஆட்டோ ஓட்டறான். செல வாளி—அவங்க அம்மா மாதிரியே....''

''அப்பா யாரு?''

''அதெல்லாம் கேக்காதே சேட்டு.''

பாபுவை நோக்கி ''உக்காரு. சோக்ரா பையன் எங்கப்பா? மூணு டீ கொண்டாரச் சொல்லு'' என்றாள்.

''பால்குண்டு ரொம்ப மோசம்பா நீ, எதுக்கு இங்கல்லாம் வரீங்க? மரியாதைப் பட்டவங்க வர்ற எடமா இது? எதாவது அர்ஜெண்டா? பாபு, பணம் வேணுமா?'' என்று தன் மார்புச் சட்டையிலிருந்து நோட்டுக்களை எடுத்து எண்ணினாள்.

''உன்னை உன்னை இந்த இடத்திலேயே வெச்சுக் கொன்னு... போட்டுரலாம்னு தோணுது'' என்றான் பாபு சாவதானமாக.

''செய்துரேன்'' என்றாள் நோட்டை எண்ணுவதை நிறுத்தாமல்.

''இதில நாற்றுப் பதினைஞ்சு இருக்குது. என்னவோ பனியன் டிசர்ட்டு வாங்கிக் கணும்னியே...''

பாபுவின் கையைப் பால்குண்டு பிடித்த போது அது வியர்வையால் ஈரமாக இருப்பதையும் கட்டுக்கடங்காமல் நடுங்குவதையும் உணர்ந்தான்.

''இங்கயே சேர் போட்டிருக்கு பாரு: உக்காந்திருந்தீங்கன்னா இதோ அரை மணியில டூட்டி முடிஞ்சுரும். மூணு பேரும் பேல்பூரி சாப்டுட்டு சினிமாப் போவலாம்.''

''இல்லை லட்சுமி! நாங்க வர்றோம். வேற வேலை இருக்கு. பாபு வாடா...''

பாபுவை அவன் ஏறக்குறைய இழுத்துக் கொண்டுதான் வந்தான்.

''சாரிடா உன்னை இங்கே அழைச்சுட்டு வந்திருக்கக் கூடாது. நான் செய்த தப்பு. ரொம்ப ஆடிப்பூட்ட இல்லை?''

''ஒரு செகண்டு எனக்கு அவ தாய்ங்கறதே மறந்து போயிருச்சு குரு. பக்கத்தில ஏதாவது அருவா இருந்திருந்தா ஒரே போடு போட்டிருப்பேன். அப்படி கோபம் பத்திக்கிட்டு வந்துச்சு: இவ என்னா பொம்பளை பார்த்தியா? ஏதாவது அலட்டிக்கிறாளா? செய்யறது தப்பு, பாவம்னு ஏதாவது சொரணை இருக்குதா பார்த்தியா? இவ என் தாய்டா! எத்தனை த்யாகம் பண்ற தாய்ங்களைப் பார்த்திருக்கோம், 'எம். ஜி. ஆர். பிக்சரங்கள்ள? இவளும் தாய்டா!''

பாபு ஓர் ஓரத்தில் தலைகுனிந்து, ஆட்டோவின் பின் சீட்டில் உட்கார்ந்தான்.

''எனக்கு உபத்திரவமே இல்லை. தாயே கெடையாது!''

''சின்னக் குழந்தையில நடந்து ஞாபகம் இருக்குது குரு. கட்டிலுக்கடியில படுக்க வெச்சுருவா. என்னவோ பால்ல கலந்து கொடுத்து... தூக்கமா கண்ணைப் பெரட்டும். என்ன என்னவோ சத்தம் கேக்கும்... குரு எனக்கு மட்டும் ஏன் இப்படி? அவங்க அத்தனை பேத்தையும், அத்தனை பேத்தையும் பத்தவெக்கணும்னு கோவம் பொத்துக்கிட்டு வருது குரு....''

''பத்த வெச்சுரலாண்டா.''

வர்ஷா கதவருகிலேயே ப்ரொபஸர் ராம்பிரகாஷைக் கேட்டாள். ''எதுக்காக என்னை வீட்டுக்கு அழைச்சீங்க?''

''முக்கியமான விஷயம் பேசணும் வர்ஷா.''

''யூனிவர்ஸிட்டியிலயே பேசியிருக்கலாமே.''

''இல்லை வர்ஷா, வீட்டுலதான் இந்தப் பேச்சு நடக்கணும்.''

''எனக்கு என்னமோ புரியலை. ஹலோ மிஸஸ் ராம்பிரகாஷ்...''

''வா வர்ஷா! உன்னை வீட்டுக்கு அழைச்சுட்டு வந்தாச்சா?'' என்றாள் அம்ருதா.

வர்ஷா ப்ரொபஸரைச் சங்கடமாகப் பார்த்தாள்; ''நான் போய்ட்டு...''

''இரு வர்ஷா!'' என்றார் ப்ரொபஸர். ''நீ இந்த க்ரைஸிஸைச் சந்திக்கத்தான் ஆகணும்- அம்ரு, வாம்மா, டீ எல்லாம் அப்பறம்.''

''என்னவாம்?'' என்றாள் அம்ருதா. அவள் கண்களில் லேசாகச் சந்தேகமும் பயமும் இருந்தன. வர்ஷா தைரியமாக இருந்தாலும் அவளுக்கு இந்த சந்தர்ப்பத்தின் காரணம் சரியாகப் புரியவில்லை. வற்புறுத்தி ராம்பிரகாஷ் அவளை வீட்டுக்கு அழைத்து இரண்டு மூன்று தடவை நினைவுபடுத்தி,

**ஆசிரியர்: உங்க மகன் கணக்குல ரொம்ப வீக்கா இருப்பானே, அவன் இப்போ என்னவா இருக்கான்?**

**தந்தை: அரசியல் கட்சிக்குப் பொருளாளரா இருக்கான்!**

**— கடுவை கோபால்சாமி.**



ஏறக்குறைய வலுக்கட்டாயமாக அவளை இங்கே இழுத்து வந்திருப்பதில் ஏதாவது ஒரு குறிக்கோள் இருந்தே ஆகவேண்டும்.

அம்ருதா உனக்கு ஆச்சரியமா இருக்கலாம். எதுக்காக இந்தப் பெண்ணை வீட்டுக்கே நான் அழைச்சிருக்கிறேன்னு. அதே போல வர்ஷா உனக்கும் எதுக்காக மனைவியை இப்படி நேரடியா சந்திக்க ஏற்பாடு செய்திருக்கேன்னு...: ரெண்டு பேரும் கேளுங்க. அம்ருதா! நடந்தது என்ன ஆனாலும் உம்பேர்ல அன்புங்கறது எனக்குக் குறையவே இல்லை, அதை எத்தனை தடவை திருப்பித் திருப்பிச் சொன்னாலும் நீ புரிஞ்சுக்க மாட்டேங்கற... நம்ப மாட்டேங்கறே. வர்ஷா, உனக்கு எம்மேல இருக்கற. அது என்ன சொல்றது, ஈடுபாடு, வாத்ஸல்யம்னு எத்தனையோ குறைபட்ட வார்த்தைகள்ளாம் இருக்கு; அந்த உணர்ச்



சியை என்னால விவரிக்கவே முடியலை. சைக்கலாஜிகலா பார்த்தா, 'ஃபாதர் ஸப்ஸ்டிடியூட்'டுன்னும் சொல்ல முடியலை. பிஸிகலா எம்மேல உனக்கு ஒரு வசீகரம் இருக்கிறது. அந்த வசீகரம்தான் எனக்குப் பயமா இருக்குது. ஏன்னா, நானும் உம் பேர்ல கவரப்பட்டு ஏதாவது விபரீதமாயிடு மோன்னு என்மேலயே எனக்கு நம்பிக்கை யில்லை. அதனால அந்த விஷயத்தை இப்பவே போட்டு உடைச்சர்றது பெட்டர். முளையிலயே கிள்ளிர்றது பெட்டர். பாரு வர்ஷா, வாழ்நாள் முழுவதும் என்னால என் மனைவியை விட்டுப் பிரிஞ்சு வர முடியாது. அந்த மாதிரி காரியங்களுக்கெல் லாம் இன்னமும் நம்ம சொஸைட்டி முழு மையா தயாராகலை. என்னை விட்டா அவளுக்கு வேற வாழ்வு இல்லை. அவளை விட்டாலும் எனக்கு.... அவ ஒரு நல்ல மனைவி. நேற்றைக்கு அவ மனசில ஒரு விநோதமான சந்தேகம் வந்திருக்கிறது. அதுதான் எனக்குப் பயமா இருக்கு. நாம ரெண்டு பேரும் சேர்ந்துண்டு சதி செய்ய றோமாம். சொல்லு அம்ரு, உன் சந்தேகம் என்னங்கறதைச் சொல்லிடு.''

அம்ருதா மௌனமாக இருந்தாள்.

''சொல்லு! அந்த ரேப்பை அரேஞ்ச் பண்ணதே நாங்கதானே, சொல்லு! அப்படித்தானே?''

''வாட் நான்சென்ஸ்'' என்றாள் வர்ஷா.

''அம்ரு உன் மனசுக்குள்ள அந்த முள் இருக்கு. அதைத் தோண்டி எடுத்தே ஆக ணும், சொல்லிடு.''

''இது நமக்குள்ள விவகாரம். இவ எதுக்கு?''

''இல்லை அம்ரு இவளுக்கும் இந்த 'ஷாக்' வேணும்.''

''என்ன ஷாக் ப்ரொபஸர்?''

''வர்ஷா சில வகையான உறவு முறைகள் எல்லாம் இந்த நாட்டில சாத்தியமே இல்லை. மேல்நாட்டு நாவல்களிலயும் சினிமாக்களில யும்தான் நீ சொல்ற மாதிரி கொஞ்சம் செக் ஸும் இண்டலக்சுவலிஸமும் அடல்ட்டரி யும் கலந்த உறவு அனுமதிக்கப்படும். நம்ம சம்பிரதாயத்தில அதுக்கு இடமே இல்லை வர்ஷா. உனக்கும் எனக்கும் வயசு ரொம்ப வித்தியாசம். நான் கல்யாணம் ஆனவன், எனக்கு அழகான மனைவி இருக்கா. அவளைக் காப்பாற்ற வேண்டியது. அவ மனசில இருக்கிற சந்தேகங்களையும் பயங்களையும் நீக்க வேண்டியது, எனக்கு மிக மகத்தான பொறுப்பு வர்ஷா. எங்களை விட்டுரு. லீவ் அஸ் அலோன் ப்ளீஸ் லீவ் அஸ் அலோன்.''

ராம்பிரகாஷ் குரல் ஏறக்குறைய அழு கைக் குரலாக மாறியிருந்தது. கண்களில் கண்ணீர் பளிச்சிட்டது.

வர்ஷா சற்று நேரம் அவரையே மௌன மாகப் பார்த்துக் கொண்டிருந்தாள். அதன் பின் ஏதும் பேசாமல் எழுந்தாள். புறப்பட் டாள். மறைந்தாள்.

அவள் போய் முழு நிமிஷம் ஆகிறவரை ப்ரொபஸரையே அம்ரு பார்த்துக் கொண் டிருந்தவள், ''இது என்ன டிராமா?'' என் றாள்.

''டிராமா இல்லை, அம்ரு!''

''இதுக்குப் போய் நான் ஏமாறுவேன்னு நினைச்சுண்டிருக்கீங்களா?''

''அம்ரு என்ன சொல்றே?''

''இந்த டிராமா கூட உங்க ரெண்டு பேரோட சதித் திட்டத்தில ஒரு பகுதின்னு எனக்குத் தெரியாதா? அவ்வளவு முட்டா ளில்லை நானு.''

''அம்ரு யூ ஆர் இன்ஸேன்'' என்றார்.

''இல்லை! இன்னும் எனக்கு மூளை இப்பதான் கூர்மையா வேலை செய்யறது. என்னை இன்ஸேனா ஆக்கணும்னு பார்க் கிறீங்க... ஆனா அது முடியாது. ஸாரி! நோ, ஐ ரெஃப்யூஸ் டுபி மேட்!''

(தொடரும்)

---

''எப்படா ஸ்டிரைக் முடிஞ்சு ஆபீஸுக்குப் போகப் போறோம்னு இருக்கு....

''ஏன்?''

''என்னதான் வீட்டிலே தூங்கினாலும் ஆபீஸிலே தூங்குகிற சுகம் கிடைக்கலே.''

— கிட்டு.





''கல்யாண மண்டபத்தை விட்டு வெளியே போறவங்களை 'மெட்டல் டிடெக்டர்' வச்சு சோதனை போடுறாங்களே, ஏன்?''

''ஏகப்பட்ட டம்ளர் ஸ்பூன் காணாமல் போயிடுச்சாம்.''

— வளர்மதி ஆசைத்தம்பி.

கிழித்து எறிந்த தபால்களின் முத்திரை லண்டன் பிரிஸ்டல் என்றிருந்தாலென்ன? கல்கத்தா டாக்கா என்றோ டெல்லி பம்பாய் என்றோ மாறினாலென்ன? பெருக்கிக் கூட்டுபவளுக்கு எல்லாம் சமம்தான். அவள் அதைக் கூட்டிக் கொண்டுதானிருப்பாள்.

மகமாயியும் 1948—லிருந்து ஹட்சின்ஸன் கம்பெனியைப் பெருக்கிக் கூட்டி வந்தாள். அவள் வேலையில் சேர்ந்த போது அது வெள்ளையர் நிர்வாகம். ஹட்சின்ஸன் வங்காளியான ஹிரேன்ஸென்னுக்கு விற்ற காரணம் இரண்டாம் உலகயுத்தத்தில் பிரிட்டனின் பொருளாதார வீழ்ச்சி. இந்தியாவை விட்டு பிரிட்டிஷார் வெளியேறியது.

மவுண்ட்ரோடில் இருந்த அந்த மூன்று மாடிக் கட்டடம் மூன்று கை மாறினாலும் 'குட்வில்'லுக்காக ஹட்சின்ஸன் பெயரையே சுமந்திருந்தது.

கம்பெனியும் கட்டடமும் கை மாறிய விஷயம் கடந்த நாற்பதாண்டுகளாக அதைப் பெருக்கித் தூய்மைப்படுத்திவரும் மகமாயியைப் போன சனிக் கிழமை வரை பாதித்ததில்லை.

அந்த நாற்பது வருஷங்கள் விரலிடுக்கில் நழுவிய நீர்த்தாரையென ஓடி மறைந்ததை அவள் எப்போதாவது நினைப்பதுண்டு.

பதினாறு வயசுப் பெண்ணாகப் பட்டணத்தில் பிரவேசித்தவள் மகமாயி. ஆடிப் பதினெட்டுக்குச் சுற்று வட்டாரம் திருவிழாக் கோலாகலத்தோடு கூடும் நீப்பத்துறை அவள் ஊர்.

கை ரிக்ஷா இழுத்த காளிமுத்து தாலி கட்டிக் கூட்டி வந்த கிராமத்துப் பெண் அவள். அவன் ரிக்ஷாவில் தற்செயலாகப் பயணம் செய்ய நேர்ந்த உதவி மானேஜர் ஹாக்கின்ஸ் வில்ஸன் தயவில் தான் மகமாயிக்கு இந்த உத்தியோகம் கிட்டியது.

மூன்று மாடிகளிலும் உள்ள பன்னிரண்டு அறைகளையும் ஹால்களையும் கூட்டிப் பெருக்கிக் குடி தண்ணீர் எடுத்து வைக்க வேண்டும். சம்பளம் அன்றைய பதின்மூன்று ரூபாய். ஞாயிறு விடுமுறை.

காளிமுத்து மகமாயிக்குக் கட்டுப்பட்டவன். இருவருக்கும் பிள்ளைப்பேறு இல்லாதது எதிர்விகித சமன்பாடு மாதிரி ஒரு விசேஷ காந்த மையத்தை உருவாக்கியிருந்தது. அவளின்றி ஒரு நாளை அவனால் சகிக்க முடியாது. இவ்வளவு கொள்ளை ஆசை வைத்திருக்கிற புருஷனை விட்டு அவள் எப்படி ஒரு தினத்தை வெளியே கழிப்பாள்? அது நீப்பத்துறையே என்றாலும் என்ன?

ஆனாலும் ஓடி உலவி, மழையிலும் நிலவிலும் ஆடிக் களித்த நீப்பத்துறை இளமை, அவளது நினைவு முடிச்சுகளில் சேமிப்பாகக் கனத்தது.

என்றாவது ஒரு நாள் அந்த நீப்பத்துறை ஆற்றில் குறு வெள்ளம் ஓடும் ஒரு பதினெட்டாம் பெருக்கன்று கூழாங்கற்கள் மேனியில் வழுக்க, கண் மூடி சவம் மாதிரி ஆற்றில் அடித்துச் செல்லும் ஆசை ஒன்று அவளுள் கூடு கட்டி வந்தது.

"த.... ஒரு நாளு ஒன் ரிக்ஸா... என் தொடப்பம் ரெண்டுத்தயும் தல முழுவிட்டு அக்காடாண்ணு நீப்பத்துறை ஆத்துலே மெதந்துட்டு வர்லாம் வாப்பா."

"ஒரு நாளுன்னு கௌம்பி ஓடியாந்துட முடியாதுடீ முண்டம்! மூணு நாலு நாள் ஆவும். ஒன்னை கம்பெனியிலே வுட்டாங்கன்னா அவ்வளவுதான். வேற ஆராவது வந்து பூந்துக்குவாளுங்க. ரிக்ஷா மேல இன்னும் கடன் கீது. கவனம் வச்சுக்கோ."

இப்படி நீப்பத்துறை அவளுக்கு ஒரு தூரத்து லட்சியமாயிற்று.

ஹட்சின்ஸன் கம்பெனியின் மூன்று மாடிகளின் பன்னிரண்டு அறைகளையும் ஹால்களையும் கூட்டிக் கூட்டி அந்தக் கட்டடத்தின் நாற்காலி மேஜைகளோடு ஒரு பந்தம் வந்து விட்டது.



போதாக்குறைக்கு அங்கே அடிக்கடி மாறிய மானேஜர்கள், கிளார்க்குகள், டைப் பிஸ்டுகள், ஆபீஸ் பையன்கள் என்று ஒவ்வொருவரும் காட்டிய பரிவு.

''மகமாயி இன்னிக்கு என்ன சமையல்? மீன் கொளம்பா சொறா புட்டா?''

''எறா வறுக்கப் போறேன்! ஒங்களுக்கும் கொண்டாரட்டா?''

''எம்மாடி... சும்மா பேச்சுக்குக் கேட்டேன். இந்தா இன்னிக்கு மலபார் அவியல். ஒனக்குண்ணே எங்க வீட்டுக்காரி கூட வச்சிருக்கா.''

அவள் வேலை கூட்டுவதுதான் என்றாலும் எடுப்புச் சாப்பாட்டுக் கூடைகள் லிப்டின் கீழே நிற்கும் போது அறையறையாகக் கொண்டு போய்க் கொடுத்து மீண்டும் அவற்றை எடுத்து வருகிற ஓர் உபரி வேலையையும் செய்து வந்தாள்.





"ஸ்மால்ஸ்கேல்இண்டஸ்ட்ரீஸ்னு ஆரம்பிச்சிங்களே... என்ன உற்பத்தி செய்யறீங்க...?"

"அரை அடி ஸ்கேல்..."

— கில்பர்ட்.

ஹட்சின்ஸன் அண்ட் டிக்கின்ஸன் கம்பெனிக்கு ஞாயிறு விடுமுறை என்றாலும் ஒவ்வோர் அறையிலும் உள்ள 'கர்ட்டன்'களை மாற்றுவது. அறைகளைக் கழுவி விடுவது என்று ஞாயிறுகளில் அவளுக்கு ஒரு வேலை இருக்கும்.

காலம் மகமாயியின் கன்னங்கரேல் என்று கறுத்த கொண்டையைக் கொஞ்சம் வெள்ளையாக்கிய போது சைக்கிள் ரிக்ஷாவில் சலித்த காளிமுத்து ஆட்டோ ரிக்ஷா வாங்கினான்.

ஒருநாள் மவுண்ட் ரோடிலிருந்து திருவல்லிக்கேணி போகும் சாலையில் ஒரு விபத்தில் சிக்கி அவன் மாண்டு போனான். ஹட்சின்ஸன் கம்பெனியின் பல ஊழியர்கள் அவனது சவ அடக்கத்தில் கலந்து கொண்டனர்.

ஒரு வாரம் சித்தப்பிரமை பிடித்தவள் போல தன் ஹாமில்டன் வாராவதிக் குடிசையில் தனியே படுத்திருந்தாள் மகமாயி.

பியூன் பொன்னுலிங்கம் சைக்கிளில் வந்தான்.

"தா மகமாயி நீ வேலைக்கி வர்ரியா வேற ஆளையாவதுவச்சிக்கலாமான்னுமானேஜரு கேட்டுனு வரச் சொன்னாரு."

ஹட்சின்ஸனுக்காக அவள் ரத்தம் முப்பது வருஷம் ஓடியிருக்கிறது. பந்தம் நெடியது!

"நிக்கறதுன்னாக் கூட நீ நின்னுக்கலாம்! உனக்கு கிராசுவிடி... பி.எப். உண்டு. ஆனா ஒரு கடிதாசி எழுதிக் குடுத்துட்டு வந்துடணும்."

அவளை மேகமாகக் கவிந்திருந்த பிரிவுத் துயர் பட்டென்று விலகிற்று.

காளிமுத்து போய் விட்டதால் அவள் உலகம் அஸ்தமித்தது வாஸ்தவம். எந்த அஸ்தமனம்தான் நிரந்தரமானது? மீண்டும் விடிய வேண்டும்.

ஹட்சின்ஸன் இருக்கிறதே!

அவள் வேலைக்குத் திரும்பினாள்.

ஹாமில்டன் வாராவதிக்கும் கம்பெனிக்கும் ஓடி ஓடி நடந்ததில் ஒன்று தோன்றியது. காளிமுத்து இல்லாமல் இனி ஏன் ஒரு குடிசை?

குடிசை இல்லையென்றால் எங்கே தங்குவது?

அவள் மானேஜர் ராம நாராயணனிடம் போய் நின்றாள்.

"மானேசரய்யா! நான் ஒண்டிக் கட்டையா பூட்டேன். இனிமே ஒரு ஆடு வாசல்னு வச்சிக்கிட்டு ஓடியாட முடியலே. இங்கியே கம்பெனிக்குக் கீயே ஒரு கொட வுனு கீதே அங்கே மூலையிலே எஞ்சாமானுங்களை வச்சிக்கிறேன். கம்பெனி வாசல்ல படுத்துக்கறேன். நைட் வாட்ச்மேன் கிட்டே சொல்லி பர்மிஷன் தரணும்."

ஹட்சின்ஸன் நிர்வாக ஒழுங்கும், விதிமுறைகளும் நிறைந்த கம்பெனி. இப்படி ஒரு வேண்டுகோளை அது கவனமாகப் பரிசீலித்தது. கீழ் மட்டத்தில் அந்த வேண்டுகோள் மறுக்கப்பட்டாலும் உயர் மட்டத்தில் கம்பெனி பாதுகாப்பிற்கு மகமாயி போன்ற ஒரு விசுவாசமான ஊழியர் உதவியாக இருக்கலாம் என்று ஏற்கப்பட்டது.

மகமாயி ஹட்சின்ஸனின் கிடங்கு மூலையில் குடியேறினாள். கம்பெனி வராந்தாவில் காற்றோட்டமாக ஜமக்காளம் விரித்துப் படுத்து விடுவாள்.

மவுண்ட் ரோடின் இரவு வாகன சஞ்சாரம் தாலாட்ட, அவள் நீப்பத் துறையை நினைத்துக் கொண்டே படுத்திருப்பாள்.

சாகிற வரையில் அல்லது தனக்குத் தள்ளாமை வருகிற வரையில் ஹட்சின்ஸன் கம்பெனி தன்னை நிராகரிக்காது என்ற நம்பிக்கை அவளுக்கு இருந்தது.

அப்படி ஒருவேளை தள்ளாமையோ சாவோ வந்து விட்டால்?

இதைக் குறித்து இரவுகளில் தீவிரமாகச் சிந்தித்தாள்.

நைட் வாட்ச்மேன் நாதமுனியிடம் பேச்சுக் கொடுத்தாள்.

"ஏம்பா நாதமுனி! இப்படியே ஒரு நாளைக்கி நான் பொசுக்குனு பூட்டேன்னா எனக்கு நீ ஒரு ஒபகாரம் பண்ணணும்."

"இன்னாது கெய்வி?"

"என்னை ஒரு வண்டியிலே போட்டுனு போயி... நீப்பத்துறை தெரியுமா ஒனக்கு?"

"தெரியாதே...."

"தீர்த்த மலைக்குப் போனா அங்கிருந்து ரூட் சொல்லுவாங்க."

"அங்கே ஒம் 'பாடி'யை எடுத்துட்டுப் போயி சொந்தக்காரங்க கிட்டே ஒப்படைக்கச் சொல்றியா?"

"அதெல்லாம் ஆரும் இல்லே கண்ணு! அல்லாம் பூட்டாங்க. நீ என் பொணத்தை அங்கே கொண்டு போயி எரிச்சிடணும். அஸ்தியை அங்கே ஓடற ஆத்துலே கரைச்சிடணும்."

வாட்ச்மேன் மௌனமாயிருந்தான்.

"இதுக்கெல்லாம் பணம் சேத்து வச்சிருக்கேம்பா. பாங்கிலே இருக்கு. ஆன செலவு போவ மீதியை நீயே எடுத்துக்கோ. எனக்கும் ஆரும் கெடயாது!"

வாட்ச்மேன் "அப்படியே செய்றேன கெய்வி! சாவறப்போ கவனமா பாஸ் புஸ்தகத்த எங்கிட்டே குடுத்திட்டுச் செத்துடு"

என்று சிரித்தான்.

"ஐயா... டமாஸான்னு நெனச்சுக் கினியா... நெசமாலும் தான்" என்று அடித்துச் சொன்னான் மகமாயி.

— இரவுகள் இப்படி கழிந்தன.

விடிந்தால் ஹாட்சின்ஸனின் கட்டடமும் அறைகளும் மேஜை நாற்காலிகளும், ஊழியர்களும் பெரிய பந்தங்களாக அவனைப் பிணித்து வைக்க அவன் காலம் அற்புதமாகத்தான் ஓடியது, போன சனிக் கிழமை வரை.

போன சனிக்கிழமை அவனைத் தன் அலுவலகத்துக்கு அழைத்து ஜெனரல் மானேஜர் பேசினார்.

"மகமாயி! ஒனக்கு ஒரு ஸாரி நியூஸ்."

"இன்னாங்க ஐயா?"

"கம்பெனியை 'மாடர்னைஸ்' பண்றதுக்காக ஒரு வாக்வம் க்ளீனர் வாங்கப் போறோம்.

"அப்பமன்னா?"

"யந்திரத்திலேயே பெருக்கறது."

"பெருக்கற மிஷினா?"

"ஆமாம்.

"அப்போ எனக்கு இன்னா வேலை?"

"நீ கம்பெனிக்காக நாப்பது வருஷம் ஒழைச்சிட்டே. திங்கக் கிழமை வாக்வம் க்ளீனர் வந்துடும். அன்னியிலிருந்து நீ ஓய்வு எடுத்துக்க வேண்டியதுதான்.

"வேலை இல்லேங்கறீங்களா?"

"மிஷின் கூடத் தேஞ்சி நிக்குதே! மனுஷாளுக்கு ஓய்வு வேணாம்...? வாக்குவம் க்ளீனரை இயக்க அனுபவமுள்ள வேற ஆளு வர்றாரு."

ஐயா எனக்குப் பந்து ஜனம் ஊரு ஒறவு ஒண்ணும் இல்லே. நான் ஒண்டிக்கட்டை எங்கே போவேன்?"

"உன் சொந்த ஊருக்குப் போயிடு."

"அங்கே யாரும் இல்லீங்க.

"எனக்கு ரொம்ப வருத்தமா இருக்கு. நான் என்ன பண்ணட்டும். டைரக்டர் போர்டு மீட்டிங்லே இது தீர்மானமாயிட்டுது. நான் ஒண்ணுமே செய்ய முடியாது. நீ திங்கக் கெழமை வந்து உன் கணக்கைப் பார்த்துச் சேர வேண்டியதெல்லாம் வாங்கிக்கோ."

மகமாயியால் செய்தியைத் தாங்க முடியவில்லை. "காலம் மாறிட்டுது. பெருக்கறதுக்கு மிஷின் வந்தாச்சு. நாயந்தான். கெய்விக்காக மிஷினை உட்டுற முடியுமா?" என்று புலம்பினான்.

ஞாயிற்றுக் கிழமை காலை ஒவ்வொரு மாடியாக ஒவ்வொரு அறையாக, ஹாலாக, மேஜை நாற்காலியாகப் பார்த்துக் கொண்டே வந்து கழுவி 'கர்ட்டன்' மாற்றி ஒரு நாளெல்லாம் சிந்திய கண்ணீர் சிந்திய வாறே கழித்தான் மகமாயி.

அன்று இரவு படுத்தவன் திங்களன்று விழிக்கவில்லை. கம்பெனி டாக்டர் ஸ்கூட்டரில் வந்து பரிசோதனை செய்தார். மரணம் கம்பெனிக்குள் சம்பவித்திருப்பதால் சட்டப்படி பதில் சொல்ல வேண்டி வரும்.

டாக்டர் தம் பரிசோதனை முடிவில் மரணத்துக்குக் காரணம் மாரடைப்பு என்று கூறி விட்டார்.

கம்பெனி ஊழியர்கள் காசு வசூல் செய்து சவ அடக்கம் செய்ய முன் வந்தனர். நைட் வாட்ச்மேன் நாதமுனி தலையிட்டால் அது தவிர்க்கப்பட்டது.

மகமாயி திங்களன்று இரவு நீப்பத்துறையில் வெந்து நீறானான். மறுநாள் காலை பால் தெளியலுக்குப் பின் அவன் அஸ்தி கூழாங்கற்களை உரசிக் கொண்டு சமுத்திரத்துக்குப் பயணமாயிற்று.



நிருபர்: உங்களுக்குக் கல்யாணம் ஆகி ஒரு குழந்தையும் இருக்கிறதா பத்திரிகையிலே வந்த செய்திக்கு உங்க பதில் என்னங்க...?

நடிகை: ஒரு குழந்தை எனக்கு இருக்கு என்பதைதான் மறுக்கல்லே... ஆனால் கல்யாணம் ஆகிவிட்டதாச் சொல்ற பொய்யைத்தான் நான் வன்மையா மறுக்கிறேன்...!

— கில்பர்ட்.

நிருபர்: நீங்க நடிச்ச படம் சுமார் ஐந்நூறு பேரைக் காப்பாற்றி இருக்கு!

நடிகர்: அப்படியா! ரொம்ப சந்தோஷம்! எப்படி காப்பாற்றியது...?

நிருபர்: உங்க படம் ரிலீசான தியேட்டர் தீப்பிடிச்சு எரிஞ்சு போச்சு... நல்ல வேளை தியேட்டரில் ஒருவர் கூட இல்லை...!

— எஸ். என். மாடசாமி.



# பெற்றால்தான் பிள்ளையா?



• இரண்டு வயது மஹாலக்ஷ்மியுடன் சுந்தர
ராஜன் — ராதிகா.

''முதல்
நாளிலிருந்தே
மஹாலக்ஷ்மியை
எங்கள்
குழந்தையாகத்
தான்
நாங்கள்
கருதினோம்.
எங்களிடம்
என் முனை
யளவும்
சந்தேகமோ
தயக்கமோ
இருக்கவில்லை.''

அன்று விநாயக சதுர்த்தி — தாம்பரத்தில் வசித்த தமது தந்தையை வணங்கி, ஆசி பெற்றுத் திரும்பிக் கொண்டிருந்தார் சுந்தர்ராஜன். சென்னையில், தமது வீட்டில் இஷ்ட தெய்வத்தைப் பூஜித்த மனநிறைவோடும், அப்பாவைக் கண்டு ஆசி பெற்ற மகிழ்ச்சியோடும் உற்சாகமாகக் காரை ஓட்டி வந்தார். அருகே அவர் மனைவி ராதிகா... கார் எஸ். ஓ. எஸ். கிராமத்தைக் கடந்தபோது கணவன் — மனைவி இருவருக்கும் ஏக காலத்தில் அந்த எண்ணம் மின்வெட்டியது: 'ஒரு குழந்தையைத் தத்து எடுத்துக் கொள்ள வேண்டும் என்ற நீண்ட நாள் யோசனையை இன்று செயல்படுத்தினால் என்ன...?'

நிராதரவான குழந்தைகளுக்கு அடைக்கலம் அளிக்கும் எஸ். ஓ. எஸ். கிராமத்துக்குத் திரும்பிச் சென்றது சுந்தரராஜனின் கார். திருமணமாகி எட்டு ஆண்டுகள் கழிந்தும் குழந்தைப் பேறு இல்லாத அந்தத் தம்பதியின் வாழ்நாளில் அன்று ஒரு திருப்புமுனை.

எஸ். ஓ. எஸ். கிராமத்தில், 'கர்ணப் பிரயாக்' என்ற அரசின் அங்கீகாரம் பெற்ற தத்து மையத்தை (adoption centre) நிர்வகித்து வரும் உமா நாராயணனை அவர்கள் சந்தித்துத் தங்கள் விருப்பத்தை வெளியிட்டார்கள்.

தத்து எடுத்துக் கொள்ள விரும்பும் பெற்றோருள் தொண்ணூறு சதவிகிதத்தினர், முதுமையில் தங்களைக் காப்பாற்றவும், சொத்துக்கு வாரிசாக விளங்கவும், தங்களுக்கு இறுதிச் சடங்குகள் செய்யவும் ஆண் குழந்தையே வேண்டும் என்று கேட்பார்கள். ஆனால் இந்த அபூர்வத் தம்பதிகளோ பெண் குழந்தையே வேண்டும் என்றனர். இரண்டு தினங்களுக்கு முன்னர்தான் பிரமீளா என்ற பச்சிளம் பெண் குழந்தை கர்ணப் பிரயாகின் பாதுகாப்புக்கு வந்து சேர்ந்திருந்தது. ராதிகா — சுந்தரராஜனுக்காகவே வந்து சேர்ந்த குழந்தையாக அது தோன்றியது.

நிராதரவான குழந்தைகளைப் பராமரித்து அவர்களைத் தக்க பெற்றோர்களுக்குத் தத்துக் கொடுக்கும் உரிமையை 'கர்ணப் பிரயாகி'ற்கு வழங்கியுள்ளது அரசாங்கம். குழந்தைகளைக் கொடுப்பதற்கு முன் கர்ணப் பிரயாக், பெற்றோர்களை அழைத்துப் பேசுகிறது. அவர்களுடைய குடும்பச் சூழல், மனோநிலை, பொருளாதார நிலை போன்றவற்றை அவர்கள் வீட்டுக்கு நேரில் சென்று தெரிந்து கொண்ட பிறகே அவர்களுக்கு உகந்த குழந்தை எனத் தோன்றும் ஒரு குழந்தையைத் தேர்ந்தெடுத்துக் கொடுக்கிறது. குழந்தையை வழங்குவதற்கு முன்னால் மருத்துவப் பரிசோதனைகள் — பெற்றோர், குழந்தை இருவருக்குமே — செய்யப்படுகின்றன. முதல் ஆறு மாதத்துக்குக் குழந்தை, பெற்றோர் பாதுகாப்பில் இருக்குமேயொழியச் சட்டரீதியாக அவர்கள் குழந்தையாக இராது. இந்தக் கால கட்டத்தில் திடீர் சோதனைகள் மூலமும் மருத்துவ அறிக்கைகள் மூலமும் குழந்தை சரியாகப் பராமரிக்கப்படுகிறதா என்பதைக் கர்ணப் பிரயாக் கண்காணிக்கிறது. எல்லாம் திருப்தியாக இருந்தால் குழந்தையைச் சட்டப்படி தத்து எடுத்துக் கொள்ளப் பெற்றோர்கள் அனுமதிக்கப்படுகிறார்கள்.

எட்டு மாதங்கள் கழித்து சுந்தரராஜன் தம்பதியின் பொறுப்பில் பிரமீளா ஒப்படைக்கப்பட்டாள். அவளுக்கு மஹாலக்ஷ்மி என்று பெயரிட்டனர். மஹாலக்ஷ்மியின் வருகை அவர்கள் வாழ்க்கையையே மாற்றியது.

சுந்தரராஜன் தம்பதியைச் சந்தித்து அவர்கள் வாழ்க்கையின் இந்த இனிய திருப்பத்தைக் குறித்துப் பேசினோம்:

''மஹாலக்ஷ்மியின் வருகையால் உங்கள் வாழ்க்கையில் என்னென்ன மாற்றங்கள் ஏற்பட்டன...?''

''நீண்ட நாட்களாகப் பூர்த்தியாகாமலிருந்த ஓர் உணர்வுபூர்வமான தேவை நிறைவடைந்தது. இதன் மூலம் கிடைக்கும் மன மகிழ்ச்சியையும் மன ஆரோக்கியத்தையும் வார்த்தைகளால் வர்ணிக்க முடியாது. மஹாலக்ஷ்மி வருகையால் எங்களுக்கிடையேயான நெருக்கம் அதிகரித்தது. குழந்தைக்காக எங்கள் வாழ்க்கை முறையில் மாற்றங்கள் செய்து கொண்டோம்; சில அதிகப்படி செலவுகள் ஏற்பட்டன. — இவை எல்லாமே வாழ்க்கையை மேலும் அர்த்தமுள்ளதாக்கியுள்ளன. மேலும், பொதுவிடங்களில் பிறர் தங்கள் குழந்தைகளைப் பற்றிப் பேசும்போது நாங்களும் எங்கள் குழந்தையைப் பற்றிப் பேச முடிந்தது: பிற பெற்றோர்களைப் போல் எங்களுக்கும் பெருமைப்பட்டுக் கொள்ள, சீராட ஒரு குழந்தை இருந்தது. சமூகத்தில், பெற்றோர் என்ற அந்தஸ்து எங்களுக்குக் கிடைத்தது.''

''உங்கள் குழந்தையை ஆரம்பம் முதலே முழு அங்கீகாரத்துடன் சமூகம் ஏற்றுக் கொண்டது என்பீர்களா?''

''ஆமாம்! முதல் நாளிலிருந்தே மஹாலக்ஷ்மியை எங்கள் குழந்தையாகத்தான் நாங்கள் கருதினோம். எங்களிடம் என் முனையளவும் சந்தேகமோ தயக்கமோ இருக்கவில்லை. அதனால் எங்களைச் சுற்றியிருக்கும் எல்லோராலுமே எங்கள் மஹாலக்ஷ்மியை ஏற்றுக் கொள்ள முடிந்தது. மேலும், எங்களுக்குச் சொந்தத்தில் குழந்தை இல்லை என்பதால் எல்லோருக்கும் எங்களிடம் ஒருவித பச்சாதாபம். எனவே நாங்கள் மஹாலக்ஷ்மியை அழைத்துவந்தபோது எல்லோருமே மகிழ்ந்தார்கள்.''

''ஒரு குழந்தையைத் தத்து எடுத்துக் கொள்ள வேண்டும் என்பதில் உங்களுக்குள் கருத்து வேறுபாடே இருக்கவில்லையா...?''

''இல்லவே இல்லை! இந்த முடிவு திடீரென்று எடுக்கப்பட்டது அல்ல. அந்த

எண்ணம் தோன்றியதும் அதை நாங்கள் பகிர்ந்து கொண்டோம். மெள்ள எங்களிடையே அந்த எண்ணம் வளர்ந்து வலுப் பெற்று ஒரு தீர்மானமாக வேரூன்றியது.''

''உங்கள் பெற்றோர் மஹாலக்ஷ்மியை எவ்வாறு ஏற்றுக் கொண்டுள்ளனர்.''

''எங்கள் முடிவை நாங்கள் வெளியிட்ட போது அவர்கள் நாங்கள் இன்னும் சிறிது காலம் பொறுத்திருந்து பார்க்க வேண்டும் என்று அபிப்பிராயப்பட்டனர். 'உங்களுக்குக் குழந்தை பிறக்க வாய்ப்பே இல்லை என்று டாக்டர்கள் கூறவில்லையே? வாய்ப்புக் குறைவு என்றுதானே கூறியுள்ளனர். பிற்பாடு உங்களுக்கே ஒரு குழந்தை பிறந்தால் என்ன செய்வீர்கள்? எனக் கேட்டனர். 'அப்படி பிறந்தால் அது எங்கள் இரண்டாவது குழந்தையாக இருக்கும்' என்று நாங்கள் கூறிவிட்டோம். அதற்குப் பிறகு எங்களுடைய தீவிரம் அவர்களுக்குப் புரிந்தது. மஹாலக்ஷ்மியை அருமைப் பேத்தியாகத்தான் கருதி வருகின்றனர்.''

''நீங்கள் தனிக் குடித்தனமாக இராமல் கூட்டுக் குடும்பமாக இருந்திருந்தால் இந்த முடிவை எடுத்திருப்பீர்களா?''

''நிச்சயமாக எடுத்திருப்போம். அதை நடைமுறைப்படுத்துவது சிறிது கடினமாக இருந்திருக்கலாமேயொழிய முடிவில் மாற்றம் இருந்திராது.''

''பெற்றோரை அறியாத குழந்தையை எடுத்து வளர்க்கிறோமே. இதன் குணம் எப்படியிருக்கும்என்றசந்தேகம்உங்களுக்குத் தோன்றியதுண்டா?''

(சிரிப்பு) ''நாங்கள்தானே அவளுடைய பெற்றோர்? எங்கள் குணம்தான் அவளுக்குப் படிகிறது: படியப் போகிறது. அன்பைப் பெறவும் அன்பைச் செலுத்தவும்தான் ஒரு குழந்தையை வேண்டிப் பெற்றிருக்கிறோமே தவிர வேறு எதிர்பார்ப்புகளுடன் இல்லை.''

''உண்மையில் வேறு எந்த எதிர்பார்ப்புகளும் இல்லாமலா ஒரு குழந்தையைத் தத்து எடுத்துக் கொண்டீர்கள்?''

''நிச்சயமாக. ஓர் அனாதைக் குழந்தைக்கு வாழ்வளிக்கிறோம் என்ற தர்ம சிந்தனையுடனோ, இந்தக் குழந்தை நம்மை வயதான காலத்தில் காப்பாற்றும் என்ற நம்பிக்கையுடனோ நாங்கள் இதைச் செய்யவில்லை. இன்னும் சொல்லப் போனால் எங்கள் வாழ்க்கையை அர்த்தமுள்ளதாக்கியதில் மஹாலக்ஷ்மிதான் எங்களுக்கு ஒரு பெரிய உதவி செய்திருக்கிறாள். நாங்கள் தான் அவளுக்குக் கடன்பட்டிருக்கிறோம்.''

"குழந்தையைக் கருவில் சுமப்பதும், பெறுவதும் வளர்ப்பதும் ஓர் உணர்வு பூர்வமான" தேவையாக இருந்து வருகிறது. குழந்தையைத் தத்து எடுத்துக் கொள்வதன் மூலம் முதல் இரண்டு தேவைகள் பூர்த்தியாவதில்லையே?''

"கிடைக்காத ஒன்றுக்காக ஏங்கி, கிடைக்கும் செல்வத்தை விடுவார்களா? மேலும் நீங்கள் குறிப்பிடும் முதலிரண்டு தேவைகளும் குறுகிய காலத்தவை. குழந்தையை வளர்ப்பதில்தான் வாழ்நாளில் அதிக நேரத்தைச் செலவிடுகிறோம். அந்த வகையில் இந்த அனுபவம் பூரணமானதுதான்.''

"குழந்தைப் பேறு இல்லாத பலருக்குக் குழந்தை வேண்டும் என்ற ஆசை இருந்தாலும் ஒரு குழந்தையைத் தத்து எடுத்துக் கொள்வதற்கான மனத்துணிவோ பக்குவமோ இருப்பதில்லை. தத்து எடுத்துக் கொள்வதன் மூலம் தங்கள் இயலாமையை உலகிற்குப் பகிரங்கமாக வெளிப்படுத்துவ



சட்டம் என்ன சொல்கிறது...?

Hindu Adoption and Maintenance Act (1956) — இன்படி ஹிந்துக்கள் குழந்தைகளைத் தத்து எடுத்துக் கொள்வதும் அக்குழந்தைகள் பெற்றோரின் வாரிசுகளாக அங்கீகாரம் பெறுவதும் சாத்தியமாயிற்று. இதன்படி தத்துக் கொடுப்பவர் (அல்லது கொடுக்கும் ஸ்தாபனம்), எடுத்துக் கொள்பவர், தத்து கொடுக்கப்படும் குழந்தை — மூன்று பாலாரும் ஹிந்துக்களாக இருக்க வேண்டும்.

ஹிந்துக்கள் அல்லாதார் 1890 — ஆம் ஆண்டின் Guardians and Wards Act — க்குக் கட்டுப்படுகிறார்கள். இவர்கள் தத்து எடுத்துக் கொள்ளும் குழந்தைகள் வளர்ப்புப் பிள்ளை அந்தஸ்தைத்தான் பெற முடியும். வாரிசு உரிமைகள் இக்குழந்தைகளுக்குக் கிடையாது.

மனைவியின் உடன்பாடு இன்றிக் கணவன் ஒரு குழந்தையைத் தத்தெடுத்துக் கொள்ளச் சட்டம் அனுமதிக்கிறது. ஆனால் அதையே கணவன் உடன்பாடு இன்றி மனைவி செய்ய முடியாது.

இந்தச் சட்டத்தைச் சீர்திருத்தி எல்லா மதத்தினருக்கும்பொதுவான சட்டத்தைக் கூடிய விரைவில் கொண்டுவர ஏற்பாடு செய்வோம் என்று பிரதமர் ராஜீவ் முன்பு ஒரு முறை பேசியுள்ளார்.

நன்றி: ஜென்டில்மேன்.

தாக எண்ணுகிறார்கள்; பிறர் குழந்தையை நம் குழந்தையாக ஏற்றுக் கொள்ள முடியுமா என்று தயங்குகிறார்கள்....''

"குழந்தை பெற இயலாமையை ஒரு தலை குனிவாக ஏன் நினைக்க வேண்டும்? அன்பைப் பெறவும் தரவும் எத்தனையோ பிஞ்சுக் குழந்தைகள் காத்துக் கொண்டிருக்கின்றன. அவற்றின்பால் நமது கவனத்தைத் திருப்பலாம். பிறர் குழந்தையை எப்படி ஏற்றுக் கொள்வது என்று கேட்பவர்களுக்கு ஒரு விஷயத்தைச் சுட்டிக் காட்ட விரும்புகிறோம். சில நிமிடங்களுக்கு மட்டுமே பார்த்த ஒரு நபரைத் திருமணம் செய்து கொள்ளும் முடிவு நம் நாட்டில் சராசரி மனிதர்கள் அனைவராலும் எடுக்கப்படுகிறது. ஒரு குழந்தையைத் தத்து எடுத்துக் கொள்வது என்ற முடிவுக்கு வருவது இதைவிடக் கடினம் என்று நான் நம்பவில்லை. திருமண வயதுப் பெரியோர்களாவது ஏற்கெனவே சில மனோபாவங்களுக்குப் பழகிக் கொண்டிருப்பார்கள். ஆனால் — குழந்தைகள் அப்படி இல்லை. எழுதப்படாத புத்தகங்களாக அவர்கள் இருக்கிறார்கள். முன்பின் தெரியாத ஒரு நபரிடம் அன்பு செலுத்த முடியுமானால் ஒரு பச்சிளம் சிசுவிடம் அன்பு செலுத்த இயலாதா என்ன...? எல்லாவற்றுக்கும் மேலாகக் கடவுள் விருப்பம் என்பதும் உள்ளது. மஹாலக்ஷ்மியை நாங்கள் கடவுள் அளித்த வரப்பிரசாதமாகவே நினைக்கிறோம்.''

"இப்போது எல்லாம் மகிழ்ச்சிகரமாகத்தான் இருக்கிறது. ஆனால், குழந்தைக்கு உண்மையை எப்போது, எப்படி நீங்கள் சொல்லப் போகிறீர்கள்? அப்படிச் சொன்னால் அவள் மனம் பாதிப்புக்குள்ளாகும் என்று தோன்றவில்லையா?''

"அவளுக்குப் புரிந்து கொள்ளக்கூடிய சக்தி இருந்தால் இப்போதே கூட உண்மையைச் சொல்ல நாங்கள் தயார். வேற்று மனிதர்கள் மூலம் அவளுக்கு உண்மை தெரிய வந்தால்தான் நீங்கள் நினைப்பதைப் போன்ற அதிர்ச்சி ஏற்படும். நாங்களே உண்மையைச் சொல்லி விட்டால், அதுவும் அவள் வருகையால் எங்கள் வாழ்க்கை எவ்வளவு அர்த்தமுள்ளதாகியிருக்கிறது என்பதை அவளுக்கு உணர்த்தினால் அவளும் எங்களை முழுமையாக ஏற்றுக் கொள்வாள் என்றே நம்புகிறோம். அதற்காக, அவளை வளர்ப்பதில் எந்தவிதப் பிரச்னையும் இராது என்று கூற நாங்கள் தயாராயில்லை. சில பிரச்னைகள் தோன்றக் கூடும் — நாங்கள் அவற்றைச் சந்திக்க, சமாளிக்கத் தயாராய் உள்ளோம்.''

"இன்னொரு குழந்தையைத் தத்து எடுத்துக் கொள்வது பற்றி நீங்கள் யோசித்ததுண்டா?''

"அந்த எண்ணம் சமீப காலமாக அடிக்கடி தோன்றுகிறது. ஒரே குழந்தையாக வளர்வதை விட இன்னொரு குழந்தையுடன் சேர்ந்து வளர்வது மஹாலக்ஷ்மிக்கு நல்லது என்று நினைக்கிறோம். ஆனால் ஒன்று,





• வி. பி. சிங்: தத்துப் பிள்ளை.

முதல் குழந்தையை வரவேற்ற அதே ஆவலுடன் நாங்கள் இரண்டாவது குழந்தையையும் வரவேற்க விரும்புகிறோம். அதனால் எங்கள் மனத்தில் உள்ள எண்ணம் ஒரு தீர்மானமாக வலுப்பெறும் வரை காத்திருக்கப் போகிறோம்.'' என்று முடித்த சுந்தரராஜனும் ராதிகாவும் கர்ணப் பிரயாகையும் அதனை நிர்வகிக்கும் உமா நாராயணனையும் மிகுந்த நன்றியுடன் குறிப்பிட்டனர்.

இன்று பொது வாழ்வில் கொடி கட்டிப் பறக்கும் வி.பி.சிங், நாவல் டாடா, ஜம்னாலால் பஜாஜ் போன்றோர் தத்துப் பிள்ளைகள் என்பதை அறிந்தால், தத்து எடுத்துக் கொள்ளப்படும் குழந்தைகள் எத்தகைய மனோபாவத்துடன் வளர்வார்கள் என்பது குறித்து நம் மனத்தில் உள்ள சந்தேகங்கள் மறைந்துவிடும்.

கிழக்குத் தாம்பரத்திலுள்ள சிவானந்தா குருகுலத்தைத் தமது மனைவி லட்சுமி ராஜாராமின் உதவியுடன் நடத்தி வருபவர் ராஜாராம். இவர் அக் குருகுலத்தைத் தோற்றுவித்த எஸ். வி. அய்யர் மற்றும் டாக்டர் மங்களம் தம்பதியின் வளர்ப்புப் பிள்ளைதான்! தத்து எடுத்துக் கொள்ளப்படும் குழந்தைகளின் வாழ்க்கை பிரகாசிக்க முடியும் என்பதற்கு இவர் தம்மையே உதாரணமாகக் கூறுகிறார். குருகுலத்தில் சற்று வளர்ந்த குழந்தைகளே சேர்த்துக் கொள்ளப்படுகிறார்கள். கைக் குழந்தையாக இருக்கும் போதே தத்து எடுத்துக் கொள்ளப்பட வேண்டும் எனக் கூறும் ராஜாராம் குருகுலத்துக் குழந்தைகளைப் பொதுவாக தத்துக் கொடுப்பதில்லை.

பார்க்கப் போனால் உறவிலே ஒரு குழந்தையைத் தத்து எடுப்பதை விட அநாதைக் குழந்தையைத் தத்து எடுப்பது எவ்வளவோ நல்லது. உறவிலே வந்த குழந்தை

உண்மைத் தாய் தந்தையரை உணரும் அவர்களும் இந்தக் குழந்தையுடன் பேசி பழகிக் கொண்டிருப்பார்கள். உள்ளூர ஏக்கங்கள், துயரங்கள் உண்டாக வாய்ப் புண்டு. அனாதைக் குழந்தையை எடுத்து வளர்ப்பதில் இதுபோன்ற பிரச்னைகள் ஏதுமில்லை.



தத்தஹோமம் என்ற சடங்கைச் செய்து குழந்தைகளை சுவீகாரம் எடுத்துக் கொள்ளலாம் என்று பழைய ஹிந்து சாஸ்திரங்கள் கூறுகின்றன. இதைச் செய்ய விரும்புபவர்கள் முதலில் அரசனின் அனுமதி பெற வேண்டும். பிறகு குறிப்பிட்ட தினத்தில், அரசனின் சிப்பந்தி ஒருவனைச் சாட்சியாக வைத்துக் கொண்டு, தத்து கொடுக்கும் பெற்றோரைக் கௌரவித்து, அக்னி வளர்த்து, குழந்தையை மடியில் இருத்திக் கொண்டு, 'உன்னை எங்கள் உயிரிலிருந்து தோன்றிய உயிராக ஏற்றுக் கொள்கிறோம்' என்னும் பொருள்படும் மந்திரத்தை ஓதி, குழந்தைக்கு அமுது ஊட்ட வேண்டும். குழந்தை பிறந்தது முதல் செய்யப்படும் நாமகரணம் முதலான சடங்குகள் மீண்டும் செய்யப்பட வேண்டும். குழந்தைக்குக் காதணியும் புத்தாடையும் அணிவிக்க வேண்டும்.

தகவல்:

**மஞ்சக்குடி ராஜகோபாலசாஸ்திரிகள்**

நம் நாட்டிலுள்ள, கைவிடப்பட்ட குழந்தைகளின் எண்ணிக்கை சுமார் ஒன்றரை மில்லியன். இவர்களுள் மிகச் சிலரே சுந்தர ராஜன்—ராதிகா போன்ற தம்பதிகளால் திறந்த மனத்துடன் தத்து எடுத்துக் கொள்ளப்படுகின்றனர். மற்ற குழந்தைகள் ஓரளவு பாதுகாப்புடன் ஆசிரமத்திலோ, குழந்தைகள் இல்லத்திலோ வளரக்கூடும். ஆனால் அந்தப் பிஞ்சு மனங்கள் பெற்றோர் பாசத்துக்காக ஏங்கிக் கொண்டுதான் இருக்கும்.

— **சிதாரவி.**

மேலட்டை வண்ணப்படம், புகைப்படம்:
யோகா

முககக்ஷவரத்துக்கு —

பிளேடு தனியே ரேஸர் தனியே என்று முன்பு இருந்தது. இப்போது ரேஸருடன் பிளேடை இணைத்துத் தருகிறார்கள் — ஜப்பானில்.

எட்டு தரம் — பத்து தரம் பயன்படுத்திய பிறகு தூக்கி எறிந்து விடலாம்.

இதற்கும் மேல் புதிய ஒன்று:

அந்த ரேஸரின் பிடியில் துவாரம் ஏற்படுத்தி, சோப்பு நுரையை அடைத்து வைக்கிறார்கள். பட்டனைத் தட்டியதும் நுரை குபுகுபுவென்று கையில் வடிய, அதை முகத்தில் பூசிக் கொண்டு க்ஷவரம் செய்து கொள்ளலாம்! ஒரு வாரத்துக்கு வரும்!

ஆதாரம்: இன்டர் ஸெக்ட்.



நல்லோர்கள்

# இராமாயணத்தை

பக்தி சிரத்தையுடன்

# பாராயணம்

செய்ய கிடைக்கும் பலன்.





ஆயுளையும் ஆரோக்யத்தையும், புகழையும் வளர்ப்பது, சகோதர ஒற்றுமையை வளர்ப்பது நல்ல புத்தியையும், மங்களத்தையும் வீரியத்தையும் அளப்பது.

இந்த பாராயணத்தால் தீராத நோய்கள் தீரும். நீண்ட ஆயுள் சித்திக்கும். பகை ஒழியும். குடும்ப சச்சரவுகள் நீங்கும். எடுத்த காரியங்கள் கைகூடும். தெய்வ சக்தி ஏற்படும். என்று வாயு புராணத்தில் உமாஸம்ஹிதை கூறுகின்றது.

---

*இராமாயண பாராயணம் ஆனவுடன் கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ் வாங்கி நல்லோர்களுக்கு விநியோகம் செய்யவும்.*

---

## திருமண வைபவங்களுக்கு

*சீர்முறுக்கு, சீர்முள்ளு தேன்குழல், சீர் அதிரசம்,*
*தேன்குழல், திரட்டுப்பால், அப்பம், பருப்புத் தேங்காய்*
*வகைகள் முதலியவை செய்து தரப்படும்.*

---

**தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்**

24, 2வது மெயின் ரோடு,
காந்தி நகர், அடையாறு,
சென்னை-600 020.
போன்: 412557

**ம**ணி 10.20—ஐ நெருங்க, கண்டக்டர் கபிலன் விசில் கொடுத்தான்.... அந்த 99—ம் நெம்பர் டவுன் பஸ், அரசுடைமையான டிரான்ஸ்போர்ட் கார்ப்பரேஷனின் பராமரிப்பில், இந்தக் கிராமத்தையும், இருபத்து ஐந்து கிலோ மீட்டர் தூரத்திலிருந்த டவுனையும், இணைக்கும் பணியில், மும்முரமாய் ஈடுபட்டிருந்தது. அந்த வழித்தடத்தில், இந்த ஒரே பஸ்தான் டவுன்பஸ்... மற்றதெல்லாம் தனியாருக்குச் சொந்தமானவை... கட்டணமும் அதிகம். எனவே எப்போதுமே கூட்டமிருக்கும், இந்த டவுன் பஸ்ஸில்...

அன்று என்னவோ தெரியவில்லை... தலை போகிற அவசரமாய், முண்டியடித்துக் கொண்டு ஏறும் கூட்டத்தைக் காணோம்... அநியாயத்துக்கு, பத்துப் பன்னிரண்டு பேர்தான் இருந்தார்கள். நிறைய இருக்கைகள் காலியாய்க் கிடந்தன.

'டிரைவர் இன்னும் வரவில்லையே! எங்கே தொலைந்திருப்பான் மனுஷன்...? பத்து நிமிஷமாய் ஆளைக் காணோமே...! கபிலன் மறுபடியும் நீளமாய் விசில் கொடுத்தான்.

பெட்டிக் கடையில் தொங்கிக் கொண்டிருந்த, ஏதோ ஒரு மூன்றாந்தர வார இதழின், அட்டைப்படத்தை மேய்ந்து கொண்டிருந்த டிரைவர் மாதையனை, இந்த இரண்டாவது விசில் சத்தம்தான் உசுப்பியிருக்க வேண்டும்... கவர்ச்சி நடிகையைக் கடைசியாய் ஒரு தரம் முழுசாய்ப் பார்த்துவிட்டு, மனசில்லா மனசுடன், பஸ்ஸில் ஏறி இஞ்சினை ஸ்டார்ட் செய்து, நியூட்ரலில் கடகடக்க வைத்து, போகலாமா, என்பது போல் கபிலனை ஏறிட்டான்.

"...ரைட்... போகலாம் போப்பா... பேங்க் மூலை திரும்பற வரைக்கும் மெதுவா உருட்டிக்கிட்டே போ... ஏதாச்சும் தூங்கு மூஞ்சி கொராக்கிங்க, பஸ்ஸை பாத்து. அப்பதான் ஓடி வந்து ஏறும்... வண்டி



# மகிழ்ச்சியின் மறுபக்கம்

காலியா கெடக்கு... ஹாரனடிச்சுக்கிட்டே மெதுவா போ....''



கபிலனின் அக்கறையைக் கண்டு டிரைவரும் ஒத்துழைத்தான். பஸ் மரவட்டையாய் ஊர்ந்து, பேங்க் மூலை திரும்பியதும், சுறுசுறுப்பாகி வேகம் பிடிக்க.... கிழங்கு மில்லருகே அவசரமாய் ஒரு பெரியவர் கையை நீட்டிக் கொண்டிருந்தார்...

ஒரு டிக்கட்தானே என்று இளப்பமாய் நினைத்து, கண்டுகொள்ளாத மாதிரி, வேகத்தைக் குறைக்காமல் போய்க் கொண்டிருந்த டிரைவரைக் கபிலன் முறைத்து விசிலடித்தான்...

விதியே என்று இருபது முப்பதடி தள்ளிப் போய் நின்றது பஸ்....

பெரியவர், மூச்சிரைக்க ஓடி வந்து ஏற வேண்டியதாகி விட்டது... கபிலனுக்கு அவரைப் பார்க்கப் பாவமாயிருந்தது...

பஸ் மறுபடியும் உற்சாகமாய் வேகம் பிடித்தது... தலையை விரித்துக் கொண்ட புளிய மரங்கள் பின்னுக்குத் தள்ளப்பட்டு, ஓடி ஓடி மறைந்தன... உடனே உடனே பண்ணை நிலங்கள்... உருண்டு திரண்ட சைசில் குலைகள் தொங்க, அறுவடைக்குக் காத்திருக்கும் வாழைத் தோட்டங்கள்... தூரத்தில் இரண்டு கிராமத்துப் பெண்கள் கையாட்ட பஸ் ஒரு குலுக்கலுடன் நின்று, அவர்கள் ஏறியதும் புறப்பட்டது...

...பயணச் சீட்டைக் கேட்டு வாங்குங்கள்... — பஸ்ஸின் உள்ளே இளஞ் சிவப்பு பூச்சில், வெள்ளையில், எழுதியிருப்பதை யாருமே சட்டை செய்வதில்லை...

''யாருப்பா ஓரான் டிக்கெட் வாங்காமெ வர்றது... ஏய்யா மூண்டாக... டிக்கெட் எடுத்திட்டயா...? வெத்தலைக்காரம்மா ஒனக்கு டிக்கெட் குடுத்தேனா...? அட கேட்டு வாங்குங்கையா... யாரு வாங்கணும்...? இருக்கிறதே பதினேழு டிக்கெட்... அதுலே ஒண்ணு வித் அவுட்... யாருய்யா வாங்கணும்... கத்தறது காதிலே விழலே... சரியான கழுத்தறுப்புங்க... இப்படிச் சாதாரணமா கேட்டா ஆவாது... மாதையா ஒரு நிமிஷம் ஓரங் கட்டு... எல்லாம் அவுங்கவுங்க டிக்கெட்டை அவுங்கவுங்க கையிலே எடுத்து வையுங்க...'' —

பஸ் நின்றது. இஞ்சின் இரைந்து கொண்டிருக்க, டிரைவர் இறங்கி மரத்தின் பின்னால் ஒதுங்கியிருந்தான்...

மூன்றாவது சீட்டில், கலர் கலராய்க் கனவுகளுடன் தூங்கிக் கொண்டிருந்த ஒரு டிப்டாப் மைனரைத் தட்டி எழுப்பி டிக்கெட் கேட்க, மைனர் பேந்தப் பேந்த விழித்தான்... கபிலனுக்கு ஆத்திரமான ஆத்திரம்...

''சாரி கண்டக்டர்... அலுப்பிலே டிக்கெட் வாங்காமல் தூங்கிட்டேன்... இந்தாங்க... டவுனுக்கு ஒரு டிக்கெட் குடுங்க...'' — என டிப்டாப் மைனர் பரிதாபமாய்க் கெஞ்ச, 'கொல்'லென்று சிரித்தார்கள் மற்றவர்கள்...

''ஏய்யா... ஒனக்கிது சர்வ சாதாரணமா இருக்கலாம்... செக்கிங் வந்திருந்தா என்னாவறது...? என் பெண்டாட்டி புள்ளை குட்டிக்கு நீயா கஞ்சி ஊத்துவே... ஹூம்... பார்த்தால் படிச்சவனாட்டம் இருக்கே...

பாரதி வீரராகவன்



சிக்னலை மதிக்காமல் செல்லும் வாகனங்களைப் பிடிக்க தெற்கு ஆஸ்திரேலியாவில் ஒரு நிறுவனம் புதிய காமெராவைக் கண்டுபிடித்துள்ளது. சிக்னலுடன் இணைக்கப்பட்ட ஒரு சக்தி வாய்ந்த காமெரா, சிக்னல் சிவப்பாக இருக்கும் போது அதை மதிக்காமல் செல்லும் வாகனங்களின் நம்பர் பிளேட்டை போட்டோ எடுத்து விடும். முறை தவறி ஓட்டிய வாகன உரிமையாளரின் விலாச விவரத்தைக் கம்ப்யூட்டர் அடுத்த சில நிமிடங்களில் போலீசுக்குக் கொடுத்து விடும்.

— ஆதாரம்: ஹிந்து.

தகவல்: ஏ. கிரி.

பட்டப்பகல்லே தூக்கமாய்யா பெரிசு...? உன்னாலே அஞ்சு நிமிஷம் லேட்டு...'' —

தலைவலி விட்டது என கபிலன் ரைட் கொடுக்க, பஸ் உறுமிப் பாய்ந்தது...

அடுத்த கிராமத்தில் பஸ் நின்ற போது... வேக வேகமாகக் கூட்டம் ஏறியது... அனேகமாய் இருக்கைகள் எல்லாம் நிரம்பி, கொஞ்சம் பேர் நின்றிருந்தார்கள்.

''உள்ளே வாங்க... புட் போர்டிலே நிக்காதீங்க... எல்லாம் சில்லறையா எடுத்து வையுங்கப்பா... டிக்கெட்... டிக்கெட்... எங்கே போறே...? கூட்டுரோடா...? அறுபது பைசா எடு... யாருதுய்யா தக்காளிக் கூடை...? ஒரு ரூபா லக்கேஜ் ஆவும்... சரியா...?''

கபிலன் தலைகளை எண்ணிச் சரி பார்த்து இன்வாய்ஸ் எழுதினான்... பாலன்ஸ் தவறாமல் நின்று கொண்டே குண்டு குண்டாய் எழுதும் நேர்த்தி, அவன் தொழிலுக்குப் புதியவனல்ல என்று பறை சாற்றியது.

''மாதையா! சந்தை மேடு நாலு டிக்கெட் எறக்கு.''

ச ந் தை மே டு ஸ்டாப்பிங் இடையாது.... அரை கிலோ மீட்டர் தள்ளித் தான் ஸ்டாப்பிங். போனால் போகட்டும் என்று பரந்த மனத்துடன் அவர்களை இறக்கி விட்டான் கபிலன்... இப்படி நின்று நின்று போவதில் பயணிகளுக்கு எரிச்சல் தான் வரும்... அதைப் பார்த்தால் முடியுமா...?

அடுத்த ஸ்டாப்பிங்கில் பஸ் நின்று விட்டுப் புறப்பட்டது... புறப்படும் நேரத்தில் திமுதிமுவெனக் கொஞ்சம் பேர் ஓடிவந்தார்கள்... கபிலன் விசிலடித்து வெளியே எட்டிப் பார்த்தான்... இன்னும் நிறைய பேர் ஓடிவந்து கொண்டிருந்தார்கள். எல்லோரும் வந்து ஏறுவதற்கு, ஐந்து நிமிஷமாகி விட்டது.. மொத்தம் முப்பது டிக்கெட்டுக்கள்.

'' அப்படியே நவுந்து முன்னாலே போங்கய்யா... ஏ மீசை... சொல்லறது காதுலே விழலே... நவுரய்யா... பெரியம்மா அப்படி பொம்பளைங்க பக்கமா ஒதுங்கி நில்லு... தலையொண்ணு ஒரு ரூபா பத்து பைசா எடுத்து வையுங்க... அங்கே யாரு...? ஊர்க் கதை பேசிக்கிட்டு புட்போர்டிலே நிக்கிறது....? ஏறி உள்ளே வாங்க...'' —

அவர்களுடன் மல்லுக்கட்டி டிக்கெட் கொடுத்து முடிப்பதற்குள் போதும் போதும் என்றாகி விட்டது... முன்னுக்கும் பின்னுக்கும் நடந்து நடந்து களைத்துப் போய் விட்டான் கபிலன்... கத்தி, கத்தி தொண்டை வறண்டு பாலையாகிப் போயிருந்தது. வியர்வை கசகசத்தது... நசுங்கிப் போன நினுசில் உடம்பு வலித்தது.

அதற்குள் நிறையப் பேர் அவனை மனசுக்குள் சபித்தார்கள். தொப்பி போட்ட ஒரு தாடிக்காரன் கொஞ்சம் சத்தமாகவே முணுமுணுத்தான்:

...''சரியாப் போச்சுய்யா... இந்த வேகத்திலே போனா பொழுது விடிஞ்சிடப் போவுது... பொறப்படும் போதே லேட்டு... இந்த லட்சணத்திலே ஊட்டுக்கு ஊடு நிறுத்தறாரே...''

தொப்பி போட்ட தாடிக்காரனின் குதர்க்கப் பேச்சு கபிலனைச் சங்கடப்படுத்தியிருக்க வேண்டும்... சுறுசுறுவென்று கோபம் வந்தாலும் அடக்கிக் கொண்டான்...

இந்த முப்பது டிக்கெட்டுகளை விட்டு விட்டுப் போய்விடலாம்... அவர்களும் வேறு வழியில்லாமல் தனியார் பஸ்ஸில்தான் போவார்கள்... தனியார் பஸ்ஸில் கட்டணம் அதிகமாயிற்றே! அனாவசியமாய் முப்பது ரூபாய் வீணாகி இருக்குமே...! கல்லுடைக்கும் கூலித்தொழிலாளர்களுக்குக் கபிலனால் அந்தப் பணம் மீதியாகிவிட்டது... இந்த உண்மை தெரியாத தொப்பி போட்ட தாடிக்காரன் ஏதேதோ பேசுகிறான்...

**ப**ஸ் டவுனை நெருங்கிவிட்டது... காலைக் காட்சிக்குப் போகும் கூட்டம்... சைக்கிள் காரர்கள் விடாமல் மணியடிக்க ஆட்டோக்காரர்கள் சாரி சாரியாக வந்து அலற, பின்னால் ஒரு லாரி பெரிதாய் ஹாரனடித்துப் பயமுறுத்த, போக்குவரத்து நெரிசலில் நீந்திக் களைத்து பஸ் ஸ்டாண்டை அடைந்தது பஸ்...

பாக்கி சில்லறைக்காகக் கபிலனை மொய்த்தது ஒரு கூட்டம்... ஆயிற்று... இந்த சிங்கிளுடன் டூட்டி முடிகிறது... கலெக்‌ஷன் பணத்தைக் கட்டிவிட்டுப் போக வேண்டியது தான்.

கவுண்டரிலிருந்து திரும்புகையில் ப்யூன் அழைத்தான்: ''சார் ஒங்களை பிராஞ்ச் மானேஜர் கூட்டிட்டு வரச் சொன்னாரு...'' —

கபிலனின் மனத்தில் சின்னதாய் பயம் தோன்ற, ப்ராஞ்ச் மானேஜரின் அறைக்குப் போனான்...

அவர் வெகு மும்முரமாய் டெய்லி கலெக்ஷன் சார்ட்டைப் பார்த்துக் கொண்டிருந்தார். 99 — ஆம் நெம்பர் பஸ் இந்த மாதம் மாமூலைவிட அதிகமாய் ப்ரோகிரஸ் காட்டி அவரைச் சந்தோஷப்படுத்திக் கொண்டிருந்தது. கபிலனைக் கண்டதும், ஒரு பெருமிதப் புன்னகை அவர் உதடுகளில் எட்டிப் பார்த்தது.

''வெல்டன் மிஸ்டர் கபிலன். உங்களை இந்த ரூட்டிலே மாத்திப் போட்டதிலே கார்ப்பரேஷனுக்கு நல்ல லாபம்... உங்க டூட்டியிலே டெய்லி இருநூறு, இருநூற்று ஐம்பதுன்னு அதிகமா கலெக்ஷன் ஆகியிருக்கு... திறமையா உழைச்சிருக்கீங்க... உங்களைப் பற்றி ஜி. எம். கிட்டே சொல்லப் போறேன்... கீப் இட் அப்!''

கபிலனுக்குச் சிறகடித்து வானில் பறப்பது போலிருந்தது. கண்களை மகிழ்ச்சி நிரப்பிக் கொள்ள 'தேங்க்ஸ்' சொல்லிப் புறப்பட்டான். எட்டு சிங்கிள் ஓடிய அலுப்பும், கத்திக் கத்திப் புண்ணாகியிருந்த தொண்டை வலியும், போன இடம் தெரியவில்லை... மனம் 'தீம்' 'தீம்' என்று குதித்தது. ப்ராஞ்ச் மானேஜரின் வார்த்தைகள் அத்தனை இதமாயிருந்தன. அவனுக்கு மட்டும் கிடைத்த பாராட்டாக அவன் இதைக் கருதவில்லை... கூட்டு உழைப்பல்லவா...? டிரைவருக்கும் இதில் பங்குண்டே...! இருவருக்கும் கிடைத்த பெருமையாகவே கருதினான்.

யூனிபார்மை உருவி, வழக்கமான உடைக்கு மாறி பஸ் ஸ்டாண்டை அடைந்தான். மனைவிக்குப் பூவும் சரண்யாக் குட்டிக்கு ஆப்பிளும் வாங்கித் திரும்பும் போது யதேச்சையாய் மாதையன் எதிர்ப்பட்டான்.

மாதையன் முகத்தில் பெரிய சோகம் அப்பிக் கொண்டிருந்தது. முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டு, மனைவியுடன் வந்து கொண்டிருந்தான். அவனது கண்களும் கலங்கியிருந்தன. கபிலனுக்கு என்னவோ போலாகி விட்டது.

''மாதையன், என்னாச்சு...? ஒடம்பு சரியில்லையா...? வீட்டிலே எப்ப வந்தாங்க...?'' — எனக் கரிசனத்துடன் பரபரத்தான் கபிலன்.

''எல்லாம் ஒன்னாலே வந்ததுதான்... நிறுத்தி, நிறுத்தி ஓட்ட வெக்கறே... ஒவ்வொரு தடவையும் இஞ்சினை ஆப் பண்ணவா முடியும்... தெனமும் பத்து லிட்டர் டீசல் அதிகமாச் செலவாவுதாம்... ப்ராஞ்ச் மானேஜர் கூப்பிட்டுக் கத்தறாரு... இதே நிலைமை நீடிச்சா வேற ரூட்டுக்கு மாத்திடுவேன்னு கண்டிப்பா சொல்லிட்டாரு... ஏதோ இந்த ரூட்டிலே என் வீடு இருக்கே... டூட்டி நாளிலேயும் வீட்டுச் சாப்பாடு கிடைக்குதேன்னு சந்தோஷமா இருந்தேன்... அதுலே நீ மண்ணைப் போடப் பார்க்கிறே. அவ்வளவுதான்...'' —

கபிலன் நிஜமாகவே அதிர்ந்துவிட்டான். நிர்வாக முரண்பாடுகள் அவனை ஆச்சரியப்பட வைத்தன.

மாதையனின் சோகம் இப்போது அவனையும் தொற்றிக் கொண்டது. அதற்குள் மாதையனின் மனைவி கபிலனைப் பார்த்து,

''ஒங்களை எங்கூடப் பிறந்த அண்ணாவா நினைச்சுக் கெஞ்சிக்கறேன்... ஒங்க டிரைவருக்கு அல்சர்... கண்ட கண்ட ரூட்டுலே, ஓடி, கண்ட கண்ட எடத்திலே தின்னு ஆறு மாசம் முன்னாலேதான் செத்துப் பொழைச்சாரு. இந்த ரூட்டிலே ஓட ஆரம்பிச்ச பிறகுதான் ஒடம்பு பரவாயில்லே... காரம், புளி கம்மியா, பத்தியச் சாப்பாடு, நேரா நேரத்துக்குக் குடுக்க முடியுது... அதை இல்லாம பண்ணிடாதீங்கண்ணா...'' — எனக் கண்ணீருடன் கையெடுத்துத் தொழுது கொண்டிருந்தாள்.

கபிலன் அந்தப் புதிய சகோதர பாசத்தில் மெல்ல மெல்லக் கரைய ஆரம்பித்தான்.

அடுத்த நாள் டூட்டியில் அவன் அதிகம் அலட்டிக் கொள்ளவில்லை.

இப்பொழுதெல்லாம் கபிலனால் கலெக்ஷன் ப்ராக்ரஸ் காட்ட முடியவில்லை... நிர்வாகம் எப்பொழுது சீறிப் பாயப் போகிறதோ...? தாங்கிக் கொள்ள ஏதுவாய் மனத்தைத் திடப்படுத்திக் கொண்டிருந்தான் அவன்...



''அந்த 'கு.க.' அதிகாரி ரொம்ப 'ப்ராக்டிக்கல்' மனிதர் போல இருக்கு.''

''எப்படிச் சொல்றே?''

''உங்களுக்கு எத்தனை குழந்தைன்னு கேட்கிறதுக்கு முன்னால எத்தனை மனைவின்னு கேட்கிறார்!''

— சீர்காழி. ஸ்ரீராம்.



* என். எம். என்.



* சுப்புடு



* தியாகு

# விமர்சகர்களுக்கும் விருது!

டிசம்பரில்தான் சாதாரணமாக, சென்னையில் சங்கீத மழை கொட்டோ கொட்டென்று கொட்டும். இந்தத் தடவை கிருஷ்ணகான சபா சங்கீத உற்சவத்தோடு, நாரத கான சபாவும் (சொந்தக் கட்டடம் கட்டி முடித்து விட்ட சந்தோஷத்தில்?) ஞானானந்த சங்கீத சம்மேளனம் நடத்தப் போகிறதாம். ஆகஸ்ட் 7 முதல் 13 வரை, ஒரு நாளைக்கு நாலு கச்சேரிகள் என்று ஏழு நாளைக்கு இருபத்தெட்டு கச்சேரிகள்.

இந்தக் கச்சேரிகளைப் பொறுத்த மட்டில் சில நிபந்தனைகள் உண்டு என்கிறார் 'நாரத கான சபா' கிருஷ்ணஸ்வாமி. (இப்படி எல்லாம் கண்டிஷன் போடுகிற நிலைமையிலா இருக்கிறது கர்னாடக இசை?):

- ஞாயிற்றுக் கிழமை தோறும் பிற்பகலில் இங்கே நாம சங்கீர்த்தனம் பாட வருகிற கலைஞர்கள் மட்டுமே இந்த விழாவில் பாட அனுமதிக்கப்படுவார்கள். கே. வி. நாராயண சுவாமி, டி. கே. ஜெயராமன், மணி கிருஷ்ணசுவாமி, சிக்கில் சகோதரிகள், விக வலிங்கம் சேதுராமன், உபேந்திரன், பக்த வத்சலம் எல்லாம் வருகிறார்கள். மகாராஜபுரம் சந்தானம், டி. வி. சங்கர நாராயணன் எல்லாம் விழாவில் கிடையாது!



* கிருஷ்ணகான சபாவில் இவ்வாண்டு நடாமணி விருது பெறும் டி. கே. கோவிந்தராவ்.

- பாடகர்களின் விருப்பத்துக்குப் பக்க வாத்தியக்காரர்களைப் போடப் போவதில்லை. சுவாமிக்கு முன்னால் சீட்டுப் போட்டுப் பார்த்து, யார் யாருக்கு, எவரெவர் வயலின், மிருதங்கம் வாசிக்க வேண்டும் என்று சீட்டு வருகிறதோ அவர்கள்தான் வாசிக்க வேண்டும்!
- இந்தக் கச்சேரிகளை எல்லாம் சங்கீத வித்துவான்களே நடத்த வேண்டும். வேண்டிய வசதிகளை எல்லாம் மட்டும் நாரத கான சபா செய்து கொடுக்கும்.
- முதல் எட்டு வரிசை நாற்காலிகளுக்கு மட்டுமே டிக்கட். மற்றபடி, மீதி இடங்களில் இசை ஆர்வம் உள்ளவர்கள் இஷ்டம் போல் போய் உட்கார்ந்து ரசித்து விட்டு வரலாம்!

"தெய்வீகமான நம் இசைக்கு வித்திட்ட நாமசங்கீர்த்தனம் தோன்றக் காரணமாயிருந்த புரந்தரதாசர், கனகதாசர், ராமதாசர் ஆகியோரை மறக்காமல் இருக்கவே, நாம சங்கீர்த்தனம் தொடர்ந்து காப்பாற்றப்பட வேண்டும் என்று நினைக்கிறேன். அதற்காகத்தான் வித்துவான்களை அழைத்து, அதில் கலந்து கொள்ளச் செய்கிறேன். அதில் அப்படி கலந்து கொண்டவர்களையே அழைத்து, இசை விழாவும் நடத்தச் சொல்லக் காரணம், அவர்களுக்குள் எந்த வித வேறுபாடும் இருக்கக் கூடாது என்பதுதான்!" என்கிறார் கிருஷ்ண சுவாமி.

இதற்கெல்லாம் மேலாக, இசை வளரவும், பரவவும் தங்கள் விமரிசனத்தைப் பயன்படுத்தும் 'ஹிந்து' என். எம். நாராயண், டெல்லி 'சுப்புடு', தினமணி 'தியாகு' ஆகிய மூன்று பேரையும் கௌரவிப்பது என்று தீர்மானித்திருக்கிறார்கள். சபாஷ்!

ஏராள வித்துவான்களும், சபாக்காரர்களும் திட்டித் தீர்த்து விட்ட விமர்சகர்களை நாரத கான சபா கௌரவிக்கிறது என்பதே ஒரு விசேஷம் இல்லையா?

— சாருகேசி

தராசு கேள்வி—பதில் பகுதியில் 'என்னுடைய பங்குக்கு நானும் குழப்புவதாகக் கூறி இருக்கிறீர்கள். உங்களது பார்வைக்குச் சில கருத்துக்கள்.

வோட்டுக்களை நிரவிப் போடுவது என் பதன் அடிப்படை, கூட்டணி ஆட்சி அமைவது நாட்டுக்கு நல்லது என்ற நோக்கில் தான். தனி மெஜாரிட்டி பலம் பெற்ற ஒரு கட்சியை ஆட்சியமைக்க விடுவது நல்லது அல்ல என்ற அடிப்படையில் இதை நான் மேடையில் பேசி வருகிறேன்.

ஏன் ஒரு கூட்டணி ஆட்சி வேண்டும் என்று கூறுகிறேன்? நன்மைகள் பல, தீமைகள் சில.

## ஆணவ அரசா? கூட்டணி ஆட்சியா?



**நன்மைகள் :**

1) கூட்டணி ஆட்சிகள் நீண்ட நாள் நடைபெறாது; அரசாங்கம் மாறிக் கொண்டிருக்கும். கட்சியில் பங்கு கொண்டுள்ள மற்றொரு கூட்டணிக் கட்சி மற்றவர்களது செயலைக் கண்காணித்து வரும்.

2) ஒரு கூட்டணி விழ்ந்து வேறு ஆட்சி பதவிக்கு வரும் போது பின்னால் வருபவர்கள் நமது ஊழலை அம்பலப்படுத்தி வழக்குத் தொடர்வார்கள் என்கிற பயம் இருக்கும்.

3) அரசும் அமைச்சர்களும் மாறி வரும் போது எது நியாயமோ அதைச் செய்யும் ஒரு நிர்வாகமும் காவல் துறையும் நிலவும்.

4) 'அமைச்சர்களது பதவி நிலையற்றது' என்ற சூழ்நிலையில் தனி மனித வழிபாடு மனோபாவம் பொது மக்களிடை குறையும்; ஒரு நல்ல ஜனநாயக மனோபாவம் வளரும்.

5) ஒரு கட்சி தனி மெஜாரிட்டி பெறும் போது, "தன்னை யாரும் அசைக்க முடியாது!" என்ற ஆணவத்தில் ஆட்சி நடத்துகிறது. இதற்கு, முந்தைய ஆட்சிகளே உதாரணங்கள். இது தவிர்க்கப்படும்.

**தீமைகள் :**

1) கூட்டணி ஆட்சி தேர்தல் மூலம் அடிக்கடி அமையுமானால் நமது தேர்தல் செலவுகள் அதிகமாகும்.

2) கூட்டணி ஆட்சி தனது நிலையற்ற தன்மையினால் ஒரு சில ஆண்டுகளுக்கு ஒரு தேக்கத்தை உண்டு பண்ணலாம்.

இந்தத் தேக்கமும் தேர்தல் செலவுகளும் இடைஞ்சல்கள் என்று சொன்னால், தனி மெஜாரிட்டி பெற்று ஆணவத்துடன் ஒரு கட்சி சர்வாதிகார ஆட்சி நடத்துவதை அபாயம் என்று கூறுவேன். தனி மெஜாரிட்டி பெற்ற கட்சியின் ஆட்சி என்ற அபாயம் நல்லதா. தற்காலிக தேக்கம் கொண்ட ஒரு கூட்டணி ஆட்சியின் இடைஞ்சல் நல்லதா என்றால், இடைஞ்சல் மேல் என்பேன்.

— எம். எஸ். உதயமூர்த்தி,
சென்னை — 41.

டாக்டர் எம். எஸ். உதய மூர்த்தியின் சிந்தனைத் திறனிலும் செயல் திறனிலும் நமக்கு மிகுந்த மதிப்பும் மரியாதையும் உண்டு. ஆனால் அவருடைய இந்த கூட்டணி சித்தாந்தத்தை நம்மால் ஏற்க முடியவில்லை. ஜனநாயகம் சிறக்க, சிறந்த மாற்றுக் கொள்கையை உடைய பலமான எதிர்க்கட்சி தோன்றி, அது ஆட்சியைப் பிடிப்பதும் சாத்தியமாகிற நிலைக்கு உயர்வதே நல்லது. இரு கட்சி ஜனநாயகமே சாலச் சிறந்தது. இன்று உதிரியாக உள்ள எதிர்க் கட்சிகள், அனைவரும் ஏற்கத்தக்க அடிப்படைக் கொள்கைகளை வகுத்துக் கொண்டு இணையுமானால் அதை வரவேற்கலாம். அப்புதிய கட்சிக்கு ஒரு வாய்ப்புத் தந்தும் பார்க்கலாம். இதில் கூட்டணி ஆட்சியின் நன்மைகள் அனைத்தும் கிடைக்கும். அதே சமயம் தீமைகளான அநாவசியச் செலவும் இல்லை; தேக்க நிலையும் இராது. ஆனால் கூட்டணி அரசு என்பது பலவீனமான அரசாகவும் இருக்குமாதலால் அது இடைஞ்சல் மட்டுமல்ல, பேராபத்தானதும் கூட.

இவ் விஷயத்தில் உதய மூர்த்தியுடன் கருத்து மாறுபடும் உரிமையை கல்கி எடுத்துக் கொள்கிறது. வாசகர்கள் யோசித்துத் தங்கள் விருப்பம் போல் தக்க முடிவுக்கு வரலாம்.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 4 3154 3, 4 34 157: ஆசிரியர் குழு அலுவலகம்: 4 34 14 5.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 104 /—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 280/—; விமானத் தபால் ரூ. 680/—.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 52/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 14 0/—; விமானத் தபால் ரூ. 34 0/—.

